


வருட சந்தா - Rs.50
தனி பிரதி - Rs.5
மலர் - 22
இதழ் - 4
பிப்ரவரி 2021
36 பக்கங்கள்

# 'கேட்பதில் மாற்றம்'

## சிறப்பிதழ்

'கர்த்தாவே, உம்மைத் தேடுகிறவர்களை நீர் கைவிடுகிறதில்லை'

(சங்.9:10)

Thuthi Malar,
Madurai.

கர்த்தாவே, உம்மை என்றென்றைக்கும் துதிப்பேன் (சங்.30:12)



**தேவன் எங்களுக்குத் தந்திருக்கிற பாசமும், பரிவுமான துதி குடும்ப அங்கத்தினரே,**

உங்கள் கைபிடித்து அனுதினமும் நடத்துகிற இயேசுவோடு இணைந்து, நீங்கள் வெற்றிப் பாதையில் முன்னேற வாழ்த்துக்கள்!

நீங்க புத்தாண்டின் முதல் மாதத்தை சந்தோஷமாய் கழித்திருப்பீர்கள் என நம்புகிறோம். உம்முடைய ஆசீர்வாதத்தினாலே உமது அடியானின் வீடு என்றைக்கும் ஆசீர்வதிக்கப்பட்டிருப்பதாக(2சாமு.7:29) என்பதின்படியே உங்கள் குடும்பம் ஆசீர்வாதமாய் வாழ்ந்திருக்க வாஞ்சிக்கிறோம்.

உங்களுக்கு ஆதரவாக ஒருவரும் இல்லை என ஒருபோதும் எண்ணி விடாதீர்கள். உங்களை ஆதரிக்க பரம பட்டாளமே உங்கள் பட்சமாய் எப்போதும் இருக்கிறது. பறந்து காக்கிற பட்சிகளைப்போல (ஏசா.31:5) உங்களை வட்டமிட்டு காக்கிற கர்த்தரும் அவருடைய சேனையும் உங்களுக்காக இருக்கிறபோது நீங்கள் எவ்வளவு கொடுத்துவைத்தவர்கள்! அவர் உங்களை எல்லா தீங்குகளுக்கும் விலக்கி காத்துத் தப்பப் பண்ணுவார்; நீங்கள் கூப்பிடும்போதெல்லாம் கடந்துவந்து உங்களை ஆச்சரியமாய் விடுவிப்பார்.

உங்களுக்கு அனுப்பிய ஜனவரி மாத ஜெப மலர் கிடைத்ததா? தொடர்ந்து எங்களுக்காக ஜெபித்துவருகிற நீங்கள், ஒவ்வொரு மாதமும் ஜெபிக்க வசதியாக ஜெப குறிப்புகளை உங்களுக்கு வாட்ஸ்ஆப்மூலம் அனுப்பினால் போதுமா? அப்படியானால் தயவுசெய்து உங்கள் வாட்ஸ்ஆப் எண்ணை அனுப்புங்கள். தபாலில் பெற விரும்புகிறவர்கள் உங்கள் முழு முகவரியை உடனே அனுப்பித் தாருங்கள். எனக்காகவும், கணவருக்காகவும், மகன் சாம்-ன் திருமணத்திற்காகவும், சுவியின் படிப்பிற்காகவும், உடன் ஊழியருக்காகவும், துதி மலர் பணிக்காகவும், ஊழியத்தில் பயன்படுத்தப்படுகிற மகிமையான எல்லாவற்றின்மேலும் தேவனுடைய காவல் உண்டாயிருக்கவும் (ஏசா.4:5) ஜெபிக்க மறவாதிருங்கள்.

யேகோவாயீரே அன்றாடம் உங்களையும், உங்கள் காரியங்களையும் பார்த்துக்கொள்வதை (ஆதி.22:14,8) உணர்ந்து மகிமைப்படுத்துவீர்கள்!

உங்கள் அருமை சகோதரி,

*Sunitha Sukumar*

துதி, 9, பிரசாத் சாலை, நரிமேடு, மதுரை-2 0452-2531627, 2533627,
9843031627, WhatsApp:9843031627 Email:thuthiministries@gmail.com

**பழசோ, புதுசோ!**
thuthimalar app உங்கள் போனில் டவுன்லோடு செய்துகொண்டால் பழைய புதிய துதிமலர்களை வாசிக்கலாம்!

**நீங்களும் நாங்களும்!**
பிப்ரவரி 3, 6, 10, 13, 17, 24 நாட்களில் உங்களுக்காய் உங்களோடிணைந்து ஜெபிக்க குறிப்புகளை அனுப்பலாம்.

**இருக்கிற இடத்தில் இருக்கிறபடியே**
gpayமூலம் நன் கொடை அனுப்ப விரும்பினால் 0452-2531627, 2533627 தொடர்புகொள்ளுங்கள்



மலர்: 22
இதழ்: 4
'மாற்றம்' ஸ்பெஷல்
'கேட்பது' சிறப்பிதழ்

# துதி மலர்



பிப்ரவரி 2021

எங்கள் முகவரி
9, பிரசாத் சாலை,
நரிமேடு, மதுரை-2
தொடர்புகொள்ள:
(91) 9843031627
(0452) 2531627, 2533627

இணைந்திடுங்கள்
9843031627
ThuthiTrust MDU
Thuthi Ministries
Thuthi E-Magazine
www.thuthi.org
thuthiministries@gmail.com

**விசுவாசத்தைப் பெருக்கும் சாட்சி**



**தின தியானம்**



**பலப்படுத்தும் மன்னா**



**எழுச்சியூட்டும் சான்று**



**உணர்த்தும் தொடர்**



**சிந்திக்கவைக்கும் சம்பவம்**



**தயவாய் கேட்கிறோம்**

தாங்கள் நன்கொடை அனுப்பும்போது THUTHI TRUST (துதி டிரஸ்ட்) என்றுமட்டுமே அனுப்புங்கள். தயவு செய்து Thuthiministries என எழுதாதீர்கள். நீங்கள் இப்படி அனுப்புவதை உங்களுக்கே திரும்ப அனுப்பி மாற்றித் தர கேட்க வேண்டியதாய் இருக்கிறது.

**கவனியுங்கள்**

வங்கிமூலம் நன்கொடை அனுப்ப உங்கள் முகவரியை தபாலில் துதி டிரஸ்ட், 9, பிரசாத் சாலை, மதுரை அல்லது இமெயிலில் thuthiministries@gmail.com அல்லது தொலைபேசிமூலம் 0452-2531627, 9843031627 தெரியப்படுத்தினால், வங்கி கணக்கு விபரங்களை அனுப்ப வசதியாயிருக்கும்.

**தயவான வேண்டுகோள்**

google payமூலம் துதிஊழியத்திற்கு நன்கொடை அனுப்ப விரும்புகிறவர்கள் 9843031627, 0452-2531627, 2533627 என்ற எண்களிலோ, 9843031627 வாட்ஸ்ஆப் மூலமோ எங்களை தொடர்பு கொண்டால், உடனே விபரங்களை தெரியப்படுத்துவோம்.

## சிறியவைகளை வைத்து பெரியவர்!!



உன் முகத்திற்கு முன்னின்று ஏவியரையும் கானானியரையும் ஏத்தியரையும் துரத்திவிட, **குளவிகளை** உனக்கு முன்னே **அனுப்புவேன்.** மீதியாயிருந்து உனக்குத் தப்பி ஒளித்துக்கொள்ளுகிறவர்களும் அழிந்து போகுமட்டும் உன் தேவனாகிய கர்த்தர் அவர்களுக்குள்ளே **குளவிகளை அனுப்புவார்** (யாத்.23:28, உபா.7:20) எமோரியரின் இரண்டு ராஜாக்களையும் உங்கள் பட்டயத்தாலும் உங்கள் வில்லாலும் நீங்கள் துரத்தவில்லை; நான் உங்களுக்கு முன்பாகக் **குளவிகளை அனுப்பினேன்**; அவைகள் அவர்களை உங்கள் முன்னின்று துரத்திவிட்டது (யோசு.24:12)

போர் முனையில் வெற்றி எடுப்பதற்கு பயன்படுத்தப்பட்ட யானை படையையும், குதிரை படையையும் பற்றி அறிந்திருப்பீர்கள். ஆனால் எதிரியை ஓடஓட துரத்திய குளவிப் படையைக்குறித்து நீங்கள் அறிந்திருக்கிறீர்களா? உருவத்திலும், பலத்திலும், வேகத்திலும் பேர்பெற்ற பல சிருஷ்டிகள் இருக்க, தம் பிள்ளைகள் வெற்றிக் கொடி ஏற்றி தேசத்தையே கைப்பற்ற தேவன் பயன்படுத்தியது, பார்வைக்கு சிறிய குளவி படையைத்தான்!

அன்று நாலா பக்கங்களிலும் எதிரிகள் சிதறி ஓட தேவன் உபயோகித்தது, சிறியதாய் இருந்தாலும் கொட்டும் பலம் வாய்ந்த குளவி படையையே! இன்று எதிரியின் பார்வையில் அலட்சியமாய் தோன்றினாலும் அவனுடைய தந்திர ஏற்பாடுகளை தகர்க்கிறவர்கள், பலமிக்க முழங்கால் ஜெபத்தை ஏறெடுக்கிற நீங்கள்தான்!

அன்று எதிரிகள் எதிர்த்து நின்று போரிட முடியாமல் புறமுதுகிட்டு திரும்ப தேவனால் அனுப்பப்பட்டது, எளியதாய் இருந்தாலும் பின்னடையாமல் முன்னேறும் குளவிப் படையையே! இன்று கடுகளவு சிறியதாய் இருந்தாலும் எதிரியை திணறடிக்கிறவர்கள், வலிமையான விசுவாசத்தோடு எழும்புகிற நீங்கள்தான்!

அன்று முன்னணியில் போய் எதிரிகளை நேருக்குநேர் சந்தித்து ஜெயமெடுக்க தேவன் தேர்ந்தெடுத்தது, அற்பமாய் இருந்தாலும் அதிரடியாய் தாக்கும் குளவிப் படையையே! இன்று பரியாசமாய் தெரிந்தாலும் எதிரியின் முன்னேற்பாடுகளை முறியடிக்கிறவர்கள், கெம்பீரமான துதி முழக்கத்தோடு ஆர்ப்பரிக்கிற நீங்கள்தான்!

அன்று முழுமையாய் எதிரிகளை மேற்கொள்ள தேவன் முன்குறித்தது, மதிப்பற்றதாயிருந்தாலும் மிரளவைக்கும் குளவியையே! இன்று அபார கிரியையை வெளிப்படுத்துகிறவர்கள், சாதாரண எழுத்துக்களாய் தோன்றினாலும், அதிக உறுதியான வசன ஆதாரத்தை பற்றியிருக்கிற நீங்கள்தான்!

**அபார வெற்றியை சுதந்தரிக்க பெரிய படை தேவனுக்கு தேவை இல்லை. சிறியவைகளை வைத்து அரியவைகளை நடப்பிக்கிற தேவன் பெரியவர்! பட்டயமும், வில்லும் உங்களிடத்தில் இருக்கிறதா என்பதல்ல முக்கியம். உங்களிடத்தில் ஜெப பலம், விசுவாச ஆயுதம், துதி முழக்கம், வசன பட்டயம் இருக்கிறதா என்பதே முக்கியம்.**



இது செய்தி

## விட்டதும் - விடாதவரும்

சகோதரி சுனித்தா சுகுமார்




**இந்த 'இல்லைகளோடு' இணைந்துவிட்ட இல்லைதானா தேவனும் எனக்கு சொல்லுகிற 'இல்லை' என்கிறீர்களா? இல்லை...இல்லவே இல்லை**

**கர்த்தாவே, உம்மைத் தேடுகிறவர்களை நீர் கைவிடுகிறதில்லை (சங்.9:10)**

என்பதே அவர் சொல்லுகிற 'இல்லை'. கர்த்தரையே தேடுகிற உங்களுக்கு யார் கைவிரித்திருந்தாலும், அவர் ஒருபோதும் உங்களை கைவிடுவதே இல்லை. எந்தெந்த காரியங்களில் எல்லாம் கர்த்தரையே நீங்கள் முன்வைத்து தேடுகிறீர்களோ, அதிலெல்லாம் அவர் 'கைவிடவே இல்லை' என்ற முடிவை கட்டாயம் காண்பீர்கள். எந்த காலகட்டத்தில் கர்த்தரைமட்டுமே விடாமல் உறுதியாய் தேடுகிறீர்களோ, அந்தகால கட்டத்தில் அவர் அனுகூலமாயிருந்து 'கைவிடுகிறதே இல்லை' என்பதை நீங்கள் அனுபவிக்கும்படி அதிசயமாய் நடத்துவார்.

### தேடியவர் - தேட வேண்டியவர்

சிறியதோ பெரியதோ, அவசரமானதோ அவசியமானதோ அதை சந்தித்தவுடனே நம்மில் பலரும் தேடுவது, அவரவருடைய குடும்பத்தினர் அல்லது அறிமுகமான உயர் அதிகாரி அல்லது அவ்வப்போது பார்க்கிற மருத்துவர், ஆசிரியர் போன்றவர்கள்தான். இப்படிப்பட்டவர்கள் ஒரு தொலைபேசி தொடர்பு தூரத்தில் இருப்பதால், உடனுக்குடன் அவர்களை தேடி காரியங்களை தெரிவிக்கிறோம். ஆனால், முதல் முதலில் முழங்கால் ஜெபதூரம் என்ற இடைவெளியில் இருக்கிற தேவனை தேடுகிறவர்களுக்கு மட்டுமே 'கைவிடுகிறதில்லை' என்ற உத்தரவாதம் உண்டு.

'குழந்தை இல்லை' என்ற வெறுமை ராகேலை வாட்டியது. பரித விப்பும், பொறாமையும் மேலிட, தன் மேல் கூடுதல் பட்சமும், பாசமுமாய் இருக்கும் கணவர் யாக்கோபிடம் தனக்கு பிள்ளை கொடுக்க ராகேல் முறையிட்டாள். ராகேலின் மேல் பரிவு இருந்தாலும் பரிசான குழந்தையை அருளக்கூடிய தேவனால் அந்த சமயத்தில் கர்ப்பம் அடைக்கப்பட்டிருக் கிறது என்பதையும், அவரை தேடினால்தான் பெற்றுக்கொள்ள முடியும் என்பதையும் உணர்ந்த யாக்கோபு '**நான் தேவனா**' என்றார் (ஆதி.30:1,2). தம்மை தேடிய ராகேலை கர்த்தர் நினைத்தருளினார். கர்த்தரைத் தேடு கிறவர்களுக்கு குழந்தை பாக்கியம் என்ற 'நன்மை' குறையாக தொடராது (சங்.34:10) என வாக்கு அளித்திருக்கிறவர், குறித்த சமயத்தில் அருளி ஆனந்தப்படுத்தினார். கர்த்தர் அருளும் பரிசான குழந்தை, கர்த்தரே அருளக்கூடிய பரிசான புத்தியுள்ள மனைவி(சங்.127:4, நீதி.19:14) .. இப்படிப் பட்ட எந்த ஆசீர்வாதத்திற்கும் நன்மைகளுக்கும் காரணமாயிருக்கிற கர்த் தரை, காத்திருக்கிற காலங்களிலே கருத்தாய் தேடுவோம். கர்த்தரையே தேடுகிற நபர் என தம்முடையவர்களை அவர் அறிந்திருக்கிறார் (2தீமோ. 2:19). உங்கள் தேடல் 'இல்லை' என பதிலளிக்கும் மனிதரிடம் அல்ல, 'கைவிடுகிறதில்லை' என்னும் தேவனிடம் முழு இருதயத்தோடு திரும்புவ தாக இருக்கட்டும். காத்திருக்கிறவைகளில் 'கைவிடவில்லை' என்ற தம் உண்மையை குறித்த வேளையில் அவர் நிச்சயம் நிரூபிப்பார்.

கொடிய பஞ்சத்தினிமித்தம் பசி கொடுமையால் அவதிப்பட்டு 'உணவு இல்லை' என தவித்த கட்டத்தில் 'ராஜாவே இரட்சியும்' என்று கூக் குரலிட்ட பிரஜையிடம், '**கர்த்தர் உன்னை இரட்சிக்காதிருந்தால்** நான் எதிலிருந்து எடுத்து உன்னை இரட்சிக்கலாம்? களஞ்சியத்திலிருந்தா, ஆலை யிலிருந்தா?' (IIராஜா.6:27) என்று ராஜா தன் இயலாமையை உணர்ந்து இரட்சிக்கக்கூடிய கர்த்தரை தேட கைகாட்டினார். ராஜாபோல அதிகாரத்தில் இருப்பவர்களின்முகத்தைதேடிஅவர்களிடம்தயவுபெறமணிக்கணக்காய் நாட்கணக்காய் அலைய நேரிடுவதைக் குறித்துதான், 'ஆளுகை செய்கிற வனுடைய முகதரிசனத்தைத் **தேடுகிறவர்**கள் அநேகர்; ஆனாலும் அவனவ னுடைய நியாயம் **கர்த்தராலே** தீரும்' (நீதி.29:26) என வேதம் முன்னறி வித்திருக்கிறது. ஏனென்றால் எந்த அதிகாரி தயை செய்ய வேண்டு மானாலும் அவருடைய **இருதயத்தை** உங்களுக்கு சகாயமாக **திருப்புகிற** அதிசயத்தை **தேவகரம்** மட்டுமே செய்ய முடியும் (நீதி.21:1). தேவனை தேடுவது என்ற நேர்வழியை விட்டுவிட்டு, சகமனிதரை தேடும்படி குறுக்கு வழிகளில் இறங்கும் பரிதாபம் ஒருபோதும் வேண்டாம்.

12 நீண்ட வருடங்களாய் பெரும்பாடு என்ற பாடு அவள் சரீரத்தை படுத்தி எடுத்தாலும், அதோடு கூட அவள் அனுபவித்த பாடு, ஓரிரண்டு வைத்தியரை அல்ல, யார் யார் எந்தெந்த வைத்தியர்களை கைகாட்டி னார்களோ அத்தனை பேரையும் மாறி மாறி தேடி அலைந்த பாடுதான்! அநேக வைத்தியரை தேடி அலைந்த அவள் அலைச்சலுக்கு முடிவு கட்டி யது, இருந்த ஆஸ்திகளும், சேமிப்புகளும் செலவழிந்த போன இல்லாமை தான். இனி வைத்தியருக்கு கொடுக்க பணம் **இல்லை** என்ற கட்டத் தில்தான் அவளுடைய பல வருட தேடலின் முடிவு 'இனி உனக்கு மார்க்கமே இல்லை' என்று சொல்லியது. அவள் கேள்விப்பட்ட இயேசுவை தேடும் முடிவு அவள் வாழ்வில் புதிய துவக்கத்தை ஏற்படுத்தியது. வீட்டில் இருந்து இயேசுவை எப்படியாவது பார்க்கும் ஆசையோடு புறப்பட்டவள், சந்திக்க விருக்கிற பாதகங்களை புறம்பே தள்ளி, தொட்டால் சொஸ்தமாவேன் என்ற தீர்க்கமான ஒரே விசுவாச முடிவால் சுகத்தை சுதந்தரித்தாள்(மாற்.5:25-34). மருத்துவரோ, வக்கீலோ, நிபுணரோ எல்லாருமே 'எங்களால் முடிந்ததை யெல்லாம் செய்து முடித்துவிட்டோம்' என்று சொல்லி, 'இனி எல்லாம் படைத்தவரே' என மேலே கைகாட்டி, நம்மிடம் கைவிரிக்கும் மனிதரே. மருத்துவர் அல்ல, பரமபரிகாரியாய் உங்கள் சுகவாழ்வுக்காக தம் இரத் தத்தையே கிரயமாய் செலுத்தியிருக்கிற இயேசுதான் அவரை நம்பி கூப் பிடுகிற உங்களை எந்த நோயின் கோர பிடியிலிருந்தும் விடுவிக்க முடியும். நீங்கள் தேடுவது செல்வாக்குள்ள குடும்பத்தினரோ, அதிகாரமுள்ள அதி காரியோ, அனுபவமுள்ள சிறப்பானவரோ எவராயிருந்தாலும் அவர்களால் கைவிடப்படும் அபாயம் உண்டு. ஆனால் தேடுகிறவர் தேவனாய் இருந் தால் 'கைவிடப்படுவதில்லை' என்ற ஆசீர்வாதம் என்றென்றும் உண்டு.

## தேடியவை - தேட வேண்டியவர்

பாடுபட்டு சேர்க்கும் ஆஸ்தியும், செல்வாக்கும், நற்பெயரும், புகழும், பட்டமும், பதவியும், எதிர்பாராத ஏற்ற தாழ்வுகளை சந்திக்க நேரிடும்போது, கட்டாயம் கைகொடுக்கும் என்ற நம்பிக்கையோடு அதை சம்பாதிக்கும்படி தங்கள் நேரத்தையும், உழைப்பையும், பணத்தையும் செலவிடுபவர் உண்டு. இப்படி தாங்கள் தேடி வைத்தவைகளை நம்பி ஏமாந்த பலர் உண்டு. ஆனால் தேவனை தேடியவர் ஒருவர்கூட ஏமாற்றமடைந்ததே இல்லை.

எசேக்கியா ராஜாவானதும், தானும் தன் தேச மக்களும் தேவனை தேடுவதை முக்கியப்படுத்தினார். தேவனை தேட எல்லா மக்களையும் ஒருமுகப்படுத்தினார். தனியாகவும், குடும்பமாகவும் தேவனை தேடுவதே நாம் எடுக்க வேண்டிய முதன்மையான பிரதான நடவடிக்கை. படிப்போ, பணியோ எதிலும் தேவனை முன்வைப்பது எப்போதும் முந்தட்டும்.

எசேக்கியா ராஜா அடுத்த கட்டத்தில் சந்தித்தது, பலமிக்க அசீரிய ராஜாவின் படையெடுப்பு. அப்போதும் தனக்கு துணைநிற்கிற கர்த்தரையே நோக்கிப் பார்த்து தன் மக்களையும் தைரியப்படுத்தினார். அதோடுகூட கட்ட வேண்டியவை, உயர்த்த வேண்டியவை, பலப்படுத்த வேண்டியவை, பண்ண வேண்டியவை அத்தனையையும் திட்டமிட்டு செய்தார் (2நாளா.32: 5). என்றாலும் தான் செய்த முன்னேற்பாடுகளை வைத்து சாதித்துவிடு வேன் என நம்பாமல், தேவனை தேடுகிற என்னை அவர் வெற்றியடைய வைப்பார் என்று அவரையே நம்பியிருந்தார். நற்பெயர், ஆஸ்தி, புகழ், பதவி... இவைகள் எல்லாம் பெற்றிருப்பது நல்லதுதான். ஆனால் இவை கள்மட்டும் போதாது என்பதே உண்மை. இரவும், பகலும் தேவனை தேடு வதற்கு வேறெதுவுமே ஈடாகாது. தேவனை தேடுவதற்கு மாற்று எதுவுமே இல்லை. எந்தெந்த காரியங்களிலெல்லாம் கருத்தாய் தேடுகிறீர்களோ

அதிலெல்லாம், காலமெல்லாம் நினைத்துப் பார்த்து மகிமைப்படுத்துமளவு ஆச்சரியங்களை காண்பீர்கள். முற்றிக்கையிட்ட எதிரி, ஜனங்களை தன் வசப்படுத்த முயற்சித்தான், நிந்தித்தான், தேவனை தேடுவதை எள்ளி நகையாடி கேள்வியெழுப்பினான். பயப்படுத்தும் கடிதங்களை (2நாளா.32:5) எழுதி அனுப்பி மிரட்டினான். நெருக்கத்தையும் தூஷணத்தையும் அனு பவித்த அந்த நாள், 'பிள்ளைப்பேறு நோக்கியிருக்கிறது, பெறவோ பெல னில்லை' (2இராஜா.19:3) எனுமளவு கொடுமையாய் இருந்தது. எதிரியின் கடிதங்களையும் கர்த்தரின் பார்வைக்கு முன்பாக விரித்து வைத்து அவரையே எசேக்கியா ராஜா முதன்மையாய் தேடி மன்றாடினார்.

பல யுத்தங்களில் அசாதாரண வெற்றியை சாதாரணமாய் எடுத் திருக்கிற பலமிக்க அசீரிய ராஜா படுதோல்வி அடைய காரணம், எசேக் கியா ராஜாவின் திட்டமிடுதலோ, ஞானமான தாக்குதலோ, அபார பெலனோ இல்லை. தேவனை தேடிய ராஜாவின் இருதயமும், ஒருமித்து அவரையே தேசமக்கள் நோக்கிப் பார்த்த முடிவுமே. எங்கிருந்து யார் எப் படி தாக்குகிறார்கள் என்பதை எதிரி அறியவோ, பதிலுக்கு தாக்கவோ முடியாதபடி ஒரே ஒரு தூதனின் அதிரடி தாக்குதல் இருந்தது. செருக்காய் நடந்தவன், செத்த முகமாய் திரும்பும்படி தலைகீழ் திருப்பம் உண்டானது. வீம்பாய் பேசிய எதிரி விசனத்தோடு திரும்பினான். தேடுவது, உங்கள் பங்கு. வெற்றியை உரித்தாக்குவது தேவனின் பங்கு.

உங்கள் ஞானம், ஆஸ்தி, நற்பெயர், பட்டம், பதவி என அடுக்கக் கூடிய சம்பாத்தியங்கள் எல்லாமே யுத்தமாகிய போராட்டங்களில் ஜெயத்தை கொண்டுவராது. தேவனை தேடுவது மட்டுமே வெற்றியெடுக்க கைகொடுக் கும். சம்பாதித்த விலையேறப் பெற்றவைகளை நம்பி வாழ முடியாது. ஆதா யத்திற்காக அல்ல எப்போதுமே தேவனை தேடுவது, எல்லாவற்றிலும் வெற்றியை கொண்டு வரும். **தேவனை தேட மனதிணங்கியிருந்த நாட்களில்** எல்லாம் அவர் காரியங்களை வாய்க்கச் செய்த சான்று உசியா ராஜாவைக்குறித்து உண்டே (2நாளா.26:5). கர்த்தரை எல்லா நாட்களிலும் தேடுகிறவர்களின் இருதயம் எப்போதும் வாழும். கைகொடுக்கும் என்று நம்பி ஆதாயமாய் நீங்கள் சேர்த்தவைகள் எல்லாம் நிலைப்பவை அல்ல. அவைகளுக்கு அற்ப ஆயுசு என்பதால், தேவனைமட்டுமே தேட எடுத் திருக்கிற முடிவில் பிடிவாதமாய் தொடருங்கள். அவரை முன்னிறுத்தி நீங்கள் தேடுகிற எல்லா காரியங்களிலும் 'கைவிடப்படுகிறதில்லை' என்ற பதிலை நிச்சயமாகவே பெறுவீர்கள்.

## தேற்றியவை - தேட வேண்டியவர்

தங்களுக்கு இருக்கிற சரீர பலமும், பட்சமாய் இருக்கிற ஆள் பலமும், தங்கள் பெயரில் பாதுகாப்பாயிருக்கிற பணபலமும் எதிர்காலத்தை எளிதாய் சந்தித்துவிடலாம் என தேற்றியிருப்பதை வைத்து தைரியமாயிருப் பவர்கள் உண்டு. அந்த பலத்தை சார்ந்து நேரிடக்கூடிய எந்த எதிர்மறை யான சூழலையும் தாண்டிவிட முடியும் என கணக்கு போடுகிறவர் உண்டு.



தங்களை தேற்றுகிற இவைகள் நிரந்தரம் அல்ல என்பதால், கைவிடப் படக்கூடிய பரிதாப எல்லையில்தான் அவர்கள் நிற்கிறார்கள். தேவனை தேடுகிற நீங்கள் உலகம் 'சாதகங்கள்' என மதிக்கிற இவைகளை பெற்றிரா விட்டாலும், நீங்கள் சந்திக்கிற 'இல்லை' என்ற எப்படிப்பட்ட கட்டமும் 'கைவிடப்படுகிறதில்லை' என்ற பாக்கியமாகவே முற்றுப்பெறும்!

சிம்சோன் பெற்றிருந்த அபார பெலன் சிங்கத்தை ஆட்டுக்குட்டி போல கிழிக்க வைத்தது, கழுதையின் தாடையெலும்பை ஆயுதமாக வைத்து 1000 பேரை மேற்கொள்ள வைத்தது. பட்டணத்து வாசலோ, அகணி நார்க் கயிறுகளோ, புது கயிறோ, நெசவு நூல் பாவோ எதுவும் அவருடைய பலத்திற்கு முன் சவாலிடமுடியவில்லை. நம்பி சார்ந்திருந்த தன் பலம் நீங்கினதை உணராமல், 'எப்போதும்போல' என எண்ணிய சிம்சோன், அப்போது கைகொடுக்காமல் கைவிட்ட பெலத்தால் கைதி யானான் (நியா.16:20). பெலனற்று போய் கண்ணில்லா வேடிக்கை பொரு ளாக நின்ற நேரத்தில்தான் உணர்ந்து, கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டு அவரை உண்மையாய் உள்ளத்திலிருந்து தேடினான். கைவிடப்பட்ட பரி தாப நிலையிலும் தேவன் ஒரு விசை நினைத்தருள மன்றாடினான். தேவன் பலப்படுத்தியதால் சத்துருவை பழிவாங்கி, அபார வீழ்ச்சியை ஏற்படுத்தினான் (நியா.16:28-30).

தாங்கள் சார்ந்திருக்கிற தங்கள் சரீர பெலன் சின்ன பெல வீனத்தோடுகூட போட்டியிட முடியாமற்போன எத்தனை சான்றுகளை நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். தங்களுக்கு வருகிற ஓய்வூதியத்தை பெற்று எதிர்காலத்தில் நன்றாய் வாழமுடியும் என்று கணக்கு போட்டாலும், பணபலம் கைகொடுக்காது. பட்சமாய் பின்னணியில் இருக்கிற ஆள் பலம் எந்த கட்டத்திலும் கைவிரித்து விடலாம். ஆனால் தேவனை தேடு கிற பலம் மட்டுமே சிம்சோனின் பரிதாப கட்டத்திலே கைகொடுத்து ஆத ரித்தது. தேவனை தேடுவதால் உண்டாகிற நிலையான பலனையும், நிரந்தர திடனையும் பெருக்கவே முக்கியப்படுத்துங்கள். தேவனோடு நேரம் செலவிடுகிறதற்கும், வசன ஆதாரத்தை பற்றிக்கொள்ளுவதற்கும், துதியோடு மகிமைப்படுத்திக் கொண்டாடுவதற்கும், குறையாத விசுவாசத் தோடு அவரையே பற்றிக் கொள்வதற்கும் சமயமெடுங்கள்.

தேற்றுவதாக நம்பப் பண்ணி சந்தோஷப்படுத்தும் தேடல்கள் சஞ் சலத்தை முடிவாக்கும். தேவனை தேடுவதின் விளைவுமட்டுமே மகிழ்ந்து சந்தோஷிக்க வைக்கும் (சங்.40:16) என்பதை பசுமரத்தாணிபோல மன தில் பதித்திடுங்கள்! உடல் பலமோ, பண பலமோ, ஆள் பலமோ தரும் சந் தோஷ ஆதாயம் முற்றிலும் தற்காலிகமே! தேவனை தேடுவதுதான் உங் கள் வாழ்வில் என்றும் நிரந்தர சந்தோஷத்தை பொங்கி பெருக வைக்கும்.

**தேவனைத் தேடுகிற உணர்வுள்ளவன் உண்டோ என்று பரலோ கத்திலிருந்து மனுபுத்திரரைக் கண்ணோக்கி பார்க்கிறவர், (சங்.14:2) நம்மை கண்டு மகிழட்டும்! தமக்குக் காத்திருக்கிறவர் களுக்கும் தம்மைத் தேடுகிற ஆத்துமாவுக்கும் நல்லவராகிய கர்த்தர் (புலம்.3:25) உங்களை நன்மைகளால் நிறைப்பாராக!**

# அப்பதான் புரிந்தது!

கர்த்தருக்கு மகிமையுண்டாக... அவன்...தெரிந்து ஏற்படுத்தப்பட்டவனாயும் இருக்கிறான் (2கொரி.8:19)

'நான் என் பெயரை கொடுத்தும் என்னை பேச்சு போட்டியில் சேர்க்கவில்லை. என்னைவிட குறைந்த மதிப்பெண் எடுத்த பிள்ளைகளின் பெயர்களைகூட தேர்ந்தெடுத்தாங்க. இதுவரைக்கும் நான் வகுப்பில் முதல் 3 இடத்திற்குள்தான் வந்திருக்கிறேன். ஒரு மாதம்கூட அதை விட்டு கீழே இறங்கவில்லை. 1 நாள்கூட விடுப்பு எடுக்காம ஒழுங்காய் போயிருக்கேன். 1 முறைகூட வீட்டு பாடம் எழுதாம போனதில்லை. ஆனால் ரூபி டீச்சர் என்னை மட்டும் தேர்ந்தெடுக்கல' என்று பட்டாசாய் பொரிந்தபடி வீட்டிற்குள் நுழைந்தாள் ஜெபா. 6-ம் வகுப்பு படித்து வந்த ஜெபா, பள்ளியிலும், வீட்டிலும் பயங்கர சமத்து.

பேச்சுப் போட்டியில் பங்கெடுக்குமளவு திறமை பெற்றிருந்தால் அவளை தேர்ந்தெடுத்திருப்பார்களே. அதை மகளுக்கு எப்படி புரியவைத்து சமாதானப்படுத்துவது என யோசித்தபடி சமையலறைக்கு சென்ற அம்மா வசந்தி, ஜெபாவுக்காக போட்டு வைத்திருந்த ஆரஞ்சு பழச்சாறை எடுத்து வந்து கொடுத்தார்கள். ஆனால் ஜெபா அதை வாங்காமல் முகத்தை 6 மணிபோல உர்ரென்று வைத்திருந்தாள். வேகமாக அலமாரியில் இருந்த சின்ன கத்திரிக்கோலை எடுத்து வந்து, 'ஜெபா, நம்ம வீட்டு வாசலில் இருக்கிற முருங்கை மரத்தில் ஒரு கொப்பை இதை வைத்து வெட்டி எடுத்துட்டு வாம்மா' என்றார்கள். உடனே ஜெபா, 'என்னம்மா சொல்றீங்க? இது பேப்பர் வெட்டுகிற கத்திரிக்கோல். இதை வைத்து எப்படி மரத்தை வெட்ட முடியும்?' என கேட்டாள். உடனே வசந்தி ஒன்றும் தெரியாததுபோல 'சாரிம்மா' என்றார்கள். அடுத்து இரும்பு சாமான் இருக்கும் அறைக்குள் இருந்து மரம் வெட்டும் கோடாரி ஒன்றை எடுத்து வந்து, 'ஜெபா, இங்க வா உன் கை விரலில் நகம் வளர்ந்திருக்கு. நான் அதை வைத்து வெட்டி விடுகிறேன்' என்றார்கள். ஒரு நிமிடம் அதிர்ந்த ஜெபா, 'என்ன ஆச்சுமா உங்களுக்கு?' என்றாள். அதிர்ச்சியோடு பார்த்த மகளைப் பார்த்து, 'வசந்தி பயப்படாதம்மா. உன்னை புரிய வைப்பதற்காகத்தான் அம்மா அப்படி சொன்னேன்' என்றார்கள்.

**எதிரொலி:**

ஒவ்வொருவரும் பிரகாசித்து தேவநாமத்திற்கு மகிமை சேர்க்க தெரிந்துகொள்ளப்பட்ட பகுதி உண்டு. அதில் உங்களைப்போல சிறப்பாய் ஒருவரும் பிரகாசிக்க முடியாது. பிறருக்கு இருக்கிற சிறப்பம்சங்கள் எனக்கு இல்லையே என ஒப்பிட்டு கவலைப்படவோ, ஏமாற்றமடையவோ வேண்டாம்.

**எடுக்கவேண்டிய தீர்மானம்:** எத்தனையோ பேருக்கு இல்லாத, உங்களுக்குமட்டுமே இருக்கும்படி வித்தியாசமாய் தேவன் தந்திருக்கிற சிறப்பம்சங்களை உணர்ந்து, அதை இன்னும் மெருகேற்ற தேவ துணையோடு முயற்சிக்க தீர்மானியுங்கள்.



# ஒருவர்... ஒருவர்மூலமாய்... ஒருவரால்!!

மகா பெரிய நகரமாகிய நினிவே மக்களின் அக்கிரம நடக்கையைக் குறித்து தேவன் பகிர்ந்துகொண்டது, **ஒரு** யோனாவிடம்! நினிவே பட்டணத்தாரின் மனந்திரும்புதலைக்குறித்து அறிவிக்க தேவன் அழைத்தது **ஒரு** யோனாவை! பாவம் நிறைந்த நினிவே பட்டணத்தாரிடம் செய்தி சென்றடைந்தது, **ஒரு யோனாமூலமாய்**! தேவன் செய்யவிருப்பது ஒருவரையும் விடாமல் நினிவேயின் ராஜா துவங்கி, பெரியோர் மற்றும் சிறியோர் என அனைவரையும் எட்டியது **ஒரு யோனாமூலமாயே**! நினிவேயின் மக்கள் தொகைக்குட்பட்ட அனைவரும் மெய் தேவனை விசுவாசித்து, தேவனை தேடும்படி தங்கள் மிருகங்களோடு ஒன்றும் ருசிபாராமலும், தண்ணீர் குடியாமலும் உபவாசமிருந்தது, **யோனா ஒருவரால்**! நினிவேயின் மக்கள் அவரவர் தம்தம் பொல்லாத வழியையும், கையின் கொடுமையையும் விட்டு மனந்திரும்ப தேவன் முன்குறித்ததை நிறைவேற்றியது, **யோனா ஒருவரால்**!

நீங்களும்கூட **ஒரே ஒருவராய்** உங்கள் பட்டணத்திற்கு ஆசீர்வாதமாய் இருக்க முடியும். உங்கள் **ஒருவர்மூலமாய்** உங்கள் பட்டணத்தில் உங்களோடு பணிபுரியும் நபர்களுக்கும், உங்கள் உயர்அதிகாரிகளுக்கும், உங்கள் தெருவில் குடியிருப்பவர்களுக்கும், உங்களோடு அன்றாடம் பழகுகிறவர்களுக்கும் மெய்தேவனைக்குறித்த செய்தி சென்றடைய முடியும். உங்கள் **ஒருவரால்** பரலோகமே கொண்டாடும்படி ஜீவ புத்தகத்தில் பெயர் எழுதப்பட்டு நரக அழிவிற்கு தப்பினோரின் எண்ணிக்கை மிகுதியாக முடியும்.

யோனா, ஒரு தீர்க்கதரிசி...அவரை தேவன் பயன்படுத்தினார்....
என்னை அப்படி பயன்படுத்துவாரா?
யோனா சொன்னதை கேட்டு பட்டணமே மனந்திரும்பியது...
நான் சொன்னால் கேட்பார்களா?
யோனாவின்மூலம் பட்டணத்தின் அழிவே தடுக்கப்பட்டது...
என்மூலமாய் அழிவு நிறுத்தப்படுமா?
யோனாவின் வார்த்தைக்கு கீழ்ப்படிந்து பொல்லாத வழிகளையும், கொடுமையான கிரியைகளையும் விட்டு தேவனை விசுவாசித்தனர்
...என்னைக்கொண்டு தேவன் அப்படிப்பட்ட கிரியையை நடப்பிப்பாரா?
இப்படித்தானே உங்கள் மனதில் நீங்களும் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?

உங்களை பயன்படுத்த திட்டமிட்டிருப்பது தேவன். நீங்கள் இருக்கிற பட்டணத்தில் உங்களை வைத்திருப்பது தேவன்தான். உங்களுக்கு கொடுத்திருக்கிற பதவியோ, செல்வாக்கோ எதுவானாலும், தேவராஜ்ய கட்டுமானப்பணியை நிறைவேற்றும் நோக்கத்தோடேயே உங்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. உங்களைக் கொண்டு தம் கிரியையை செயல்படுத்த தேவன் ஆயத்தமாய் இருக்கிறார்.

**'நான் ஆயத்தம்'** என்று நீங்கள் அர்ப்பணிப்பதுதான் உங்கள் பங்கு! **'நீ தான் வேண்டும்'** என்று உங்களை கையில் எடுத்து பயன்படுத்துவது தேவனின் பங்கு!

1, 2 No No
3, 4 No No No

## எதை சொல்லுவது?
## எதை சொல்லாமல் விடுவது?

அளவிடமுடியலை
ஆராயமுடியலை

**'யாரிடமும் சொல்லாத சின்ன சின்ன ஆசைகளைகூட பெரிய தேவன் பார்த்துபார்த்து செய்வது எத்தனை பாக்கியம்'** இப்படி தன்னை சந்தோஷப்படுத்திய தருணங்களை விவரிக்கிறார், **Sis.எஸ்தர்**

❶ சீம்பால் கிடைத்தால் நன்றாய் இருக்குமே என்ற ஆசை அவ்வப்போது அவர்கள் நினைவில் வந்து போகும். மாடு வளர்ப்பவர்கள் பொதுவாக சீம்பாலை விற்க மாட்டார்கள் என்பது அவர்களுக்கும் தெரியும். அதனால் தன்னுடைய ஆசையைப்பற்றி அவர்கள் யாரிடமும் சொன்னது கூட கிடையாது. ஒருநாள் அவர்களுக்கு அறிமுகமான ஒரு சகோதரி 'எங்கள் மாடு கன்று போட்டிருக்கிறது. உங்களுக்கு நான் சீம்பாலை கொண்டு வந்திருக்கிறேன்' என சொல்லியபடி வந்தார்கள். சீம்பால் கிடைக்க அவர்கள் ஆசைப்பட்டதை அறிந்திருந்தவர் தேவன் மட்டுமே! தந்தவரும் அவரே!

❷ மாதந்தோறும் ரேஷன் கடைக்கு சென்று பொருட்களை வாங்கி வந்த அவர்களுடைய அம்மா, வயது மூப்பின் காரணமாக பெலவீனமடைந்தார்கள். ரேஷன் கடைக்குப் போய், காத்திருந்து பொருட்களை வாங்கித் தர யாருமே இல்லை! அக்கட்டத்தில் அவர்களுடைய குடும்பத்திற்கு மிகவும் பழக்கமான செல்வி என்ற சகோதரி அவர்களுடைய வீட்டுக்கு மிகவும் அருகில் குடிவந்தார்கள். எல்லா மாதமும் அந்த சகோதரியே இவர்களுடைய ரேஷன் கார்டையும் வாங்கிச் சென்று, எல்லாப் பொருட்களையும் வாங்கித் தருவது வாடிக்கையானது. 'எங்களுக்கு உதவி செய்யும்படி செல்வி அக்காவை எங்க வீட்டுக்கு பக்கத்திலேயே குடிவரச் செய்தீரே' என தேவனை நன்றியோடு துதிப்பது இன்றும் தொடருகிறது!

❸ அலுவலகம் வரை நடந்து போக அன்று பெலனும் இல்லை. அலுவலகத்திற்கு விடுப்பு எடுத்துவிட்டு வீட்டில் ஓய்வெடுக்க முடியாதளவு அலுவலகத்தில் வேலைப் பளுவும் இருந்தது. ஆட்டோ பிடித்து சென்றால், ஆட்டோக்காரர் ஒருவேளை அதிக பணம் கேட்பாரோ என்ற நினைப்பில் நடக்கத் தீர்மானித்தார்கள். மிகுந்த சோர்வோடு நடந்து வந்துகொண்டிருந்த சமயம், 'அக்கா நான் உங்க ஆபீஸ் வழியாகத்தான் போறேன்.. ஆட்டோல ஏறிக்கோங்க. நான் உங்களை அங்க விட்டுட்டு போறேன்' என இலவசமாய் ஏற்றினார், அவர்களுக்கு மிகவும் தெரிந்த ஒரு ஆட்டோக்காரர்! 'இப்படியும் நடக்குமா?' என்ற இன்ப வியப்பு மனதை நிறைக்க, சில நிமிடங்களில் அலுவலக வாசலில் வந்து இறங்கினார்கள். என்னே ஆச்சரியமான தேவ நடத்துதல்!!

❹ மாதந்தோறும் அலுவலகத்திற்கு ஒருநாள் விடுப்பு எடுத்துக் கொண்டு அவர்களுடைய வயதான தாயாரை முதியோர் பென்ஷன் வாங்குவதற்காக வங்கிக்கு அழைத்துச் செல்ல வேண்டியதாய் இருந்தது. என் அம்மாவை மாதந்தோறும் வங்கிக்கு பொறுப்பாய் அழைத்துச் செல்கிற ஒரு நபர் இருந்தால் எவ்வளவு நலமாயிருக்கும் என நினைத்திருக்கிறார்கள். ஆனால் யாரிடமும் இந்த உதவியை எதிர்பார்க்கவோ, கேட்கவோ



இல்லை. குறிப்பிட்ட இந்த உதவியைச் செய்வதற்கு வலிய முன்வந்து கைகொடுத்த மூவர்தான், அவர்களுடைய சபை விசுவாசியான ஜேனட் என்ற சகோதரியும், அவர்கள் வசிக்கும் அதே தெருவில் வசிக்கும் ராணி என்ற சகோதரியும், சிறுவயதிலிருந்து மிகவும் பழக்கமான மலர்ச்செல்வி என்ற சகோதரியும்! இம்மூவரில் ஒருவர் மாதந்தோறும் அவர்களுடைய அம்மாவை வங்கிக்கு அழைத்து செல்வதால், அம்மாவும் பத்திரமாய் போய் வருகிறார்கள். அலுவலகத்திற்கு மாதந்தோறும் விடுப்பு எடுக்க வேண்டிய அவசியமும் இல்லாமற் போனது. தேவதயவினால் நேரிட்டது இது!

❺ அவர்களுடைய தகப்பனார் இறந்த சமயத்தில் மிகுந்த கஷ்ட சூழ்நிலையில் இருந்தார்கள். வெந்நீர் போடுவதற்கு விறகு அடுப்பில் சிரட்டைகளை போட்டு இவர்கள் எரித்து கொண்டு இருப்பார்கள். அதைப் பார்த்த ஒரு தேவபக்தியுள்ள சகோதரி, 'என் வீட்டில் தென்னை மரம் இருப்பதால், சிரட்டை நிறைய இருக்கிறது. அதை நான் உங்களுக்குத் தருகிறேன்' என்று கூறி ஒரு சாக்குமூடையை அனுப்பியிருந்தார்கள். வெந்நீர் போடும்படி அடுப்பை எரிக்கிற சமயம் அந்த சாக்கு மூடையைத் திறந்து பார்த்தால், அதில் எல்லாமே தேங்காய்களாய் இருந்தது. அந்த மூடையை அனுப்பிய சகோதரியிடம் இவர்கள் கூறியபோது, 'அது சிரட்டை இருந்த மூடை' என நினைத்துத்தான் அனுப்பியதாகவும், அதை வைத்துக்கொள்ளும்படியும் சொன்னார்கள். தேவனுக்குத் தானே தெரியும், இவர்களுக்கு வெந்நீர் போடுவதற்கு சிரட்டையும் வேண்டும், சமையல் செய்வதற்கு தேங்காயும் வேண்டும் என்பது!!

❻ அருகருகே நெருக்கமாய் வீடுகள் நிறைந்த காம்பவுண்ட் ஒன்றில் அவர்கள் குடியிருந்தார்கள். நல்ல தண்ணீர் குறிப்பிட்ட நேரத்திற்கு மட்டுமே வரும். எல்லா வீடுகளுக்கும் சமமாக நல்ல தண்ணீர் கிடைக்க வேண்டும் என்பதற்காக வீட்டின் உரிமையாளர், ஒவ்வொரு வீட்டில் உள்ளவர்களும் முதலில் ஐந்து ஐந்து குடங்கள் மட்டும் தண்ணீர் பிடிக்கும்படி கூறுவார்கள். அடுத்த சுற்றிலும் ஐந்து ஐந்து குடங்கள்தான் பிடிக்க வேண்டும். அப்படி பிடிக்கும்போது, ஒவ்வொருவருமே சில மணி நேரம் காத்திருக்க வேண்டியதாய் இருக்கும். வீட்டின் உரிமையாளரின் கண்களில் அவர்களுக்கு மட்டும் தேவன் விசேஷித்த தயவைக் கட்டளையிட்டார். ஆகவே, எல்லாரும் பிடித்தபிறகு அவர்கள் மட்டும் தண்ணீரை மொத்தமாக பிடித்துக்கொள்ளும்படி வீட்டின் உரிமையாளர் அனுமதித்திருந்தார். அதினால், நேர விரயம் தடுக்கப்பட்டதோடுகூட, தேவையான தண்ணீரை ஒரே நேரத்தில் தாராளமாய் பிடித்து கொள்ளவும் முடிந்தது.

**வார்த்தைகளில் வெளிப்படுத்துகிற வேண்டுதல்கள் மட்டுமல்ல, இருதயத்தின் விருப்பங்கள் - நெருக்கடி பெருமூச்சுகள் - மறைமுக சிக்கல்கள் .. இவைகளும் தேவனுடைய பார்வைக்கு தப்புவதில்லை! அவருடைய பார்வையில் பட்ட பின்னர் வியப்பான மாற்றம் உண்டாகாமல் இருப்பதுமில்லை! உங்கள் வாழ்வில் சிறுசிறு காரியங்களில் வெளிப்பட்ட தேவசெயல்களும் இதற்கு சான்றுகள்தானே! அவற்றை நினைத்திடுவோம்! நன்றிக் கண்ணீரால் தேவபாதத்தை நனைத்திடுவோம்!**



இது ஒரு தொடர்

# தெரிந்தது... தெரியாதது !



பிப்ரவரி மாதம் தங்கள் தரப்பு தகவல்களை உங்களோடு பகிர்ந்துகொள்வது, சிறப்பான **சீத்திம் மரமும்,** அண்ணாந்து பார்க்க வைக்கும் **அத்தி மரமும்!**

**சீத்திம் மரம்:** என்னை உண்டாக்கினவருக்காக நான் பயன்படும் வாய்ப்பிற்காக எதிர்பார்த்திருந்தேன். தேக்கு, தேவதாரு, கேதுரு...என்றெல்லாம் உயர்ரக மரங்கள் இருக்க, அண்ட சராசரங்களையும் படைத்த தேவன், தாம் வாசம்பண்ண உண்டாக்கிய வாசஸ்தலத்திற்கானவைகளை செய்ய என்னையும் நிர்ணயம் பண்ணியிருந்ததை நினைத்து ரொம்ப சந்தோஷப்படுகிறேன். அத்திமரமே உன்னைக்குறித்து சொல்லேன்...

**அத்தி மரம்:** மனிதனாய் உலகில் நடமாடிய இயேசு என் அருகில் நின்று, அண்ணாந்து பார்த்து, என்மேல் அமர்ந்திருந்த சகேயுவை அழைத்து அவர் குடும்பத்திற்கே இரட்சிப்பை ஏற்படுத்தினார். என் நிழலில் நின்றிருந்த நாத்தான்வேலையும் இயேசுவின் கண்கள் கண்ட செய்தியை அவர் கேட்டபோது ஆச்சரியப்பட்டு விசுவாசித்தார். என் நிழலின் **கீழ்** நின்றவர்மேலும், என் கிளையின்**மேல்** அமர்ந்திருந்தவர்மேலும் இயேசுவின் பார்வை பதிந்த விசேஷத்தை எண்ணி பெருமிதமடைகிறேன்(லூக்.19:4, யோவா.1:48-50).

**சீத்திம் மரம்:** வாசஸ்தலத்திலே தேவபணிவிடைக்கடுத்தவைகளில் பயன்பட்டு முத்திரை பதித்த உடன்படிக்கை பெட்டி, பெட்டிக்கான தண்டுகள், மேஜை, வாசஸ்தலத்துக்கு நிமிர்ந்து நிற்கும் பலகைகள், ஒரு பக்க பலகைக்கான 5 தாழ்ப்பாள்கள், தொங்கு திரைக்கு 5 தூண்கள், பலிபீடம், பலிபீடத்தின் தண்டுகள், தூப பீடம், தகன பலிபீடம், அதற்கான தண்டுகள், புதிய 2 கற்பலகைகள் வைக்கிற ஒரு மரப்பெட்டி அத்தனையும் என்னைக் கொண்டு செய்யப்பட்ட பாக்கியம் (யாத்.25,26,27,30அதி) எத்தனை பெரியது!

**அத்தி மரம்:** சரியா சொன்ன...சந்தேகப்படாமல் விசுவாசமாயிருப்பதற்கு இயேசு எனக்கு செய்ததை வைத்து அன்று சுட்டிக்காட்டினார்(மத்.21:19-22). இன்று அதன்மூலம் விசுவாசத்தோடு கேட்பதையெல்லாம் பெறமுடியும் என்பது பசுமரத்தாணிபோல தலைமுறையாய் மனதில் பதிந்திருக்கிறதே.

**சீத்திம் மரம்:** வேதத்தில் இடம்பிடித்த குறைவான மரங்களுக்குள் என் பெயர் திரும்பதிரும்ப வந்திருக்கிறது பார்த்தியா? அதுவும் அரண்மனையில் இருக்கிற ராஜாவுக்காக இல்ல, பரிசுத்த வாசஸ்தலத்திலிருக்கிற ராஜாதி ராஜாவுக்காக என்பது எனக்கு கொடுத்துவைத்த சிலாக்கியம்...அப்படித்தானே!

**அத்தி மரம்:** தங்கள்தங்கள் அத்திமர நிழலில் பயப்படுத்துவார் இல்லாமல் சுகமாய் குடியிருந்தார்கள் (1இராஜா.4:25, மீகா 4:4) என்ற வாக்கின்படியே தங்கள்தங்கள் வீடுகளில் சுகமாய் அமர்ந்திருக்கும் ஆசீர்வாதம் வாசிக்கிற ஒவ்வொருவருக்கும் உண்டாயிருக்க நாங்கள் வாழ்த்துகிறோம்.

**சீத்திம் மரம்:** வனாந்தரத்திலும் சீத்திம் மரங்களை உண்டாக்கி தம் கரத்தின் வல்லமையை நிரூபிக்கிற தேவன் (ஏசா.41:19,20), நீங்கள் இருக்கிற சூழலில் தம் கரத்தின் மாண்பை விளங்கப்பண்ண வாழ்த்துதலோடு விடைபெறுகிறேன்.



# சிறப்பு நேர்காணல்

இயேசுவின் பிள்ளை என அழைக்கப்படும் பாக்கியம் பெற்ற ஒவ்வொருவருக்கும், பிள்ளைகளாய் எல்லாரும் மாறவேண்டுமே என்ற பாரமும், பரிவோடு கூடிய ஜெபமும் இருக்கவேண்டும். பகிர்ந்துகொள்ள வேண்டிய கடமையும் உண்டு. அதை தன் வாழ்வில் முக்கியப்படுத்தி தான் பார்க்கிற, பழகுகிறவர்களிடம் சொல்லிவருகிற ஒரு நபரிடம் எடுத்த உண்மையான பேட்டி இதோ...

**பேட்டியாளர்:** இயேசுவைப் பற்றி அடுத்தவர்களுக்கு சொல்லவேண்டும் என்பதை எப்படி நீங்கள் தெரிந்து கொண்டீர்கள்?

**நீட்டா :** என் பெற்றோர் சுவிசேஷம் அறிவிக்கும்படி தங்களுடைய கலாச்சாரம், மொழி, படிப்பு, சௌகரியங்கள்.. அத்தனையையும் விட்டு விட்டு வேறொரு மாநிலத்துக்கு மிஷனரிகளாக வந்தவர்கள்! விலையேறப்பெற்ற சுவிசேஷத்தை அறிவிப்பதற்கு எவ்வளவு தியாகங்களை செய்தாலும், அது நிகரல்ல என்பதை பெற்றோரின் வாழ்வின்மூலம் அறிந்தேன். மந்தையில் இல்லாமல் வழிதப்பிப்போன ஆடுகளைப்போல தம்மை அறியாத ஜனங்களை கண்டு பரிதபிக்கிற இயேசுவின் ஏக்கத்தையும் யோவா. 10:16-ன் மூலம் விளங்கிக் கொண்டேன். இயேசுவின் ஏக்கத்தை புரிந்துகொண்டதால்தான், சுவிசேஷத்தை பிறருக்கு அறிவிக்கிறேன்.

**பேட்டியாளர்:** இயேசுவைப் பற்றி நீங்கள் எப்போது சொல்லத் துவங்கினீர்கள்? எப்படி தொடர்ந்தீர்கள் என்பதை கூற முடியுமா?

**நீட்டா :** 1-வது வகுப்பு படிக்கும்போதிருந்தே பிறரிடம் நான் இயேசுவைப் பற்றி சொல்ல ஆரம்பிச்சிட்டேன். 1-வது படிக்கும்போது என் வகுப்பில் படித்தவர்களிடம் வேதத்திலுள்ள குட்டி கதைகளை சொல்வேன். எப்படி ஜெபம் பண்ண வேண்டும் என சொல்லிக் கொடுத்திருக்கேன். 2-வது வகுப்பின்போது துண்டு பேப்பரில் வசனத்தை எழுதி என் வகுப்பு பிள்ளைகளிடம் கொடுப்பதை பழக்கமாய் வைத்திருந்தேன். தெருவில் இருக்கிறவர்களுக்கு இயேசுவைக்குறித்து சொல்ல ஆரம்பிச்சேன். பிச்சைக்காரர் ஒருவருக்கு இயேசுவைப் பற்றி அறிவித்தேன். பேருந்தில் என்னுடன் பயணம்செய்பவர்களுக்கு சொல்லுவேன்.

**பேட்டியாளர்:** இயேசுவைகுறித்து எப்படி சொல்ல ஆரம்பிப்பீர்கள்?

**நீட்டா:** 'உங்களுக்கு ஒரு சின்ன கதை சொல்லவா..' என்று ஆரம்பித்து, இயேசுவின் பிறப்பையும், உயிர்த்தெழுதலையும் சொன்ன பின்பு, 'இது உண்மை சம்பவம்' என சொல்லுவேன். நம்மதான் தெய்வத்தை தேடிப்போவோம்.. ஆனால் இவரோ நம்மை தேடிவந்த அன்பான தேவன். அவர் உங்களுக்கு அன்பான தோழனாயிருப்பார் என கூறுவேன். தேவன் எனக்கு செய்த நன்மைகளையும் அவர்களிடத்தில் விவரித்து சொல்லுவேன்.

**பேட்டியாளர்:** நீங்கள் பெற்ற எந்த நன்மையை சொல்வது வழக்கம்?

**நீட்டா :** Neurocysticercosis என்ற வியாதியினிமித்தம் மூளை பாதிக்கப்பட்டு, வலிப்பு ஏற்பட்டு மரணப் போராட்டத்திலிருந்தபோது தேவன் என்னை அற்புதமாய் சுகமாக்கியதை அடிக்கடி சொல்லியிருக்கிறேன்.

**பேட்டியாளர்:** நீங்கள் சொல்லும்போது பயத்தையோ, வெட்கத்தையோ உணர்ந்திருக்கிறீர்களா? அதை எப்படி மேற்கொண்டீர்கள்?

**நீட்டா:** சின்ன வயதில் நான் பயத்தையும் வெட்கத்தையும் உணர்ந்திருக்கிறேன். பயப்பட்டால் பரலோகத்திற்கு போகமுடியாது என வேதத்தின்மூலம் தெரிந்துகொண்டதால், தேவகிருபையால் பயத்தை மேற்கொண்டேன்.

**பேட்டியாளர்:** நீங்கள் சொல்லும்போது உங்களை யாராவது கேலி பண்ணி இருக்கிறார்களா?

**நீட்டா :** ஆமா நிறைய பேர் என்னை கேலிபண்ணியிருக்கிறார்கள்.

**பேட்டியாளர்:** இயேசுவை நீங்கள் அறிவித்த சந்தர்ப்பங்களில் மனதில் பதிந்துவிட்ட சிறப்பான சந்தர்ப்பம் ஒன்றை சொல்வீர்களா?

**நீட்டா:** ஒருமுறை மதுரையிலிருந்து திருநெல்வேலிக்கு செல்லும்போது கூட்ட நெரிசல் அதிகமாய் இருந்ததால், நான் ஓட்டுநர் இருக்கைக்கு அருகில் அமர்ந்திருந்தேன். அப்போது அங்கு பல பெண்கள் பேசிக்கொண்டு இருந்தார்கள். அதில் ஒரு அக்கா மட்டும் ரொம்ப சோர்வாக காணப்பட்டார்கள். அவர்களிடம் நான் சத்தியத்தை சொல்லி அவர்களைத் தேற்றினேன்.

**பேட்டியாளர்:** இயேசுவைக்குறித்து பிறரிடம் சொன்ன பின்னர் உங்களுக்கு எப்படியிருக்கும்? அறிவித்தபின் நீங்கள் ஜெபித்திருக்கிறீர்களா?

**நீட்டா:** இயேசப்பாவைபற்றி பிறரிடம் கூறிய பின்பு இனம்புரியாத சந்தோஷமும், சமாதானமும் என்னை நிரப்பும். சுவிசேஷம் அறிவித்த பின்பு, நான் போட்ட விதையை சாத்தான் வெளியே எடுத்து போட்டுவிடக்கூடாது என்பதற்காகவும், இன்னும் அதிக கனிகளை நான் கொடுக்க வேண்டும் என்பதற்காகவும் நான் தேவனிடம் ஜெபிப்பேன்.

**பேட்டியாளர்:** உங்கள்மூலம் இயேசுவை அறிந்து ஏற்றுக்கொண்டவர்கள் என்று சொல்லக்கூடிய நபர்கள் உண்டா?

**நீட்டா :** பலரையும் நான் மறுமுறை பார்க்கிற வாய்ப்பு இருந்தது இல்லை. திரும்ப சந்தித்தவர்களை பொறுத்தவரை ஐந்து நபர்களை கூறலாம். இந்த ஐந்து நபர்களில் நான் பேருந்தில் சந்தித்த அக்கா, பத்தாம் வகுப்பு விடுதியில் படிக்கும்போது சந்தித்த நபர் போன்றவர்கள் அடங்குவார்கள்.

**பேட்டியாளர்:** .நீங்கள் சுவிசேஷம் அறிவித்தது பற்றிய சுவையான, மறக்கமுடியாத இரண்டு சம்பவங்களை சொல்ல முடியுமா?

**நீட்டா :** இரண்டாவது வகுப்பு படிக்கும்போது இடைவெளி நேரங்களில் என்னுடைய தோழிகளுக்கு இயேசுவைப்பற்றி கூறியதை என்னால் மறக்கவே முடியாது. அதில் ஐந்து பேர் மிகவும் ஆர்வமாய் கேட்டார்கள். நான் 8-வது வகுப்பு படிக்கும்போது ஒரு சின்ன prayer cell நடத்திவந்தது என் நினைவில் பதிந்திருக்கிறது. ஆர்வமாய் ஓடிவந்த சிறு பிள்ளைகளைப் பார்த்து அன்று எதிர்த்து கேள்வி எழுப்பியவர்கள், பின்னாட்களில் என் தொலைபேசி நம்பரை கேட்டு வாங்கி, என்னை பாராட்டினார்கள்.

**பேட்டியாளர்:** உங்கள் வயது என்ன? என்ன செய்கிறீர்கள்?

**நீட்டா :** 18 வயதாகிறது! இந்த ஆண்டுதான் மருத்துவ பட்டப்படிப்பில் சேர்ந்திருக்கிறேன்.

**உங்களிடம் இப்படி பேட்டி எடுக்கப்பட்டால், உங்கள் பதில் எப்படி இருந்திருக்கும் என்பது உங்களுக்குத்தானே தெரியும்? சுவிசேஷத்தை அறிவிப்பது நம்மேல் விழுந்த கடமை. அதை தீவிரமாய் நிறைவேற்றுவோம்!**



## கருப்பொருள்: மாற்றம் | அனுதின ஆகாரம் | 'கேட்பது' சிறப்பிதழ்

**பிப்ரவரி 1, 2** ஆதி.3:8 பகலில் குளிர்ச்சியான வேளையிலே தோட்டத்தில் உலாவுகிற தேவனாகிய கர்த்தருடைய சத்தத்தை அவர்கள் **கேட்டார்கள்.** அப்பொழுது ஆதாமும் அவன் மனைவியும் தேவனாகிய கர்த்தருடைய சந்நிதிக்கு விலகி, தோட்டத்தின் விருட்சங்களுக்குள்ளே ஒளித்துக் கொண்டார்கள்.
**கர்த்தரின் சத்தத்திற்கு விலக வைப்பது எது?**
**கர்த்தரின் சத்தத்தை விரும்பி கேட்கும் மாற்றம் தேவை!**

**பிப்ரவரி 3,4** எரே.6:16 வழிகளிலே நின்று, பூர்வ பாதைகள் எவையென்று கேட்டு விசாரித்து, நல்ல வழி எங்கே என்று பார்த்து, அதிலே நடவுங்கள்; அப்பொழுது உங்கள் ஆத்துமாவுக்கு இளைப்பாறுதல் கிடைக்கும்.
**கேட்டு, பார்த்து, நடக்கவேண்டிய வழி!**
**இளைப்பாறுதல் கிடைக்க வழி!**

**பிப்ரவரி 5,6** எரே.26:7,9 எரேமியா இந்த வார்த்தைகளையெல்லாம் கர்த்தருடைய ஆலயத்திலே சொல்லும்போது, ஆசாரியர்களும், தீர்க்கதரிசிகளும், சகல ஜனங்களும் **கேட்டார்கள்** ... ஜனங்கள் எல்லாரும் கர்த்தருடைய ஆலயத்திலே எரேமியாவுக்கு விரோதமாய்க் கூடினார்கள்.
**சொல்லவேண்டிய வார்த்தை!**
**கீழ்ப்படியவேண்டியவர்களா விரோதிப்பது?**

**பிப்ரவரி 7,8** உபா.1:17 நியாயத்திலே முகதாட்சிணியம் பாராமல் பெரியவனுக்குச் செவிகொடுப்பதுபோலச் சிறியவனுக்கும் **செவிகொடுக்கக்கடவீர்கள்**; மனிதன் முகத்திற்குப பயப்படீர்களாக; நியாயத்தீர்ப்பு தேவனுடையது.
**செவிகொடுப்பதில் பாரபட்சம் கூடாது!**
**பயப்படவேண்டியது நியாயாதிபதியான தேவனுக்கே!**

**பிப்ரவரி 9,10** நீதி.1:33 எனக்குச் **செவிகொடுக்கிறவன்** எவனோ, அவன் விக்கினமின்றி வாசம்பண்ணி, ஆபத்திற்குப் பயப்படாமல் அமைதியாயிருப்பான்.
**விக்கினமும், பயமும் இருக்காது!**
**இருப்பதோ அமைதி!**

**பிப்ரவரி 11,12** லூக்.6:27 எனக்குச் **செவிகொடுக்கிற** உங்களுக்கு நான் சொல்லுகிறேன்: உங்கள் சத்துருக்களைச் சிநேகியுங்கள்; உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மைசெய்யுங்கள்.
**செவிகொடுப்பவர்கள் செய்யவேண்டியது!**
**சத்துருக்களுக்குச் செய்ய வேண்டியது!**

**பிப்ரவரி 13, 14** யோவா.9:31 பாவிகளுக்கு தேவன் செவிகொடுக்கிறதில்லையென்று அறிந்திருக்கிறோம்; ஒருவன் தேவபக்தியுள்ளவனாயிருந்து அவருக்குச் சித்தமானதைச் செய்தால் அவனுக்குச் **செவிகொடுப்பார்.**
**பாவமே தடை!**
**பக்தியோடு செயலும் தேவை!**

**பிப்ரவரி 15, 16** 1யோவா.5:14 நாம் எதையாகிலும் அவருடைய சித்தத்தின்படி கேட்டால், அவர் நமக்குச் **செவிகொடுக்கிறாரென்பதே** அவரைப் பற்றி நாம் கொண்டிருக்கிற தைரியம்.

**நாம் செய்யவேண்டியது!**
**நமக்கு தேவன் செய்வது!**

**பிப்ரவரி 17, 18** யாத்.19:5 நீங்கள் என் வாக்கை உள்ளபடி **கேட்டு**, என் உடன்படிக்கையைக் கைக்கொள்வீர்களானால், சகல ஜனங்களிலும் நீங்களே எனக்குச் சொந்த சம்பத்தாயிருப்பீர்கள்; பூமியெல்லாம் என்னுடையது.

**தேவனுடையது பூமி!**
**தேவனின் சொத்தோ நாம்தான்!**

**பிப்ரவரி 19, 20** யாத்.23:22 நீ அவர் வாக்கை நன்றாய்க் **கேட்டு**, நான் சொல்வதையெல்லாம் செய்வாயாகில், நான் உன் சத்துருக்களுக்குச் சத்துருவாயும், உன் விரோதிகளுக்கு விரோதியாயும் இருப்பேன்.

**கேட்டு செய்பவர்களுக்கு நண்பன்!**
**எதிரிக்கோ எதிரி!**

**பிப்ரவரி 21, 22** மாற்.4:18 வசனத்தைக் **கேட்டும்**, உலகக்கவலைகளும், ஐசுவரியத்தின் மயக்கமும், மற்றவைகளைப்பற்றி உண்டாகிற இச்சைகளும் உட்பிரவேசித்து, வசனத்தை நெருக்கிப்போட, அதினால் பலனற்றுப்போகிறார்கள்.

**உட்பிரவேசிக்க விட்டால் நெருக்கும்!**
**பலன் தரவும் விடாது!**

**பிப்ரவரி 23, 24** லூக்.8:15 நல்ல நிலத்தில் விதைக்கப்பட்டவர்கள் வசனத்தைக் **கேட்டு**, அதை உண்மையும் நன்மையுமான இருதயத்திலே காத்துப் பொறுமையுடனே பலன் கொடுக்கிறவர்களாயிருக்கிறார்கள்.

**கேட்டதை காக்கணும்!**
**பொறுமையோடு பலன் தரவேண்டும்!**

**பிப்ரவரி 25, 26** யோவா.5:24 என் வசனத்தைக் **கேட்டு**, என்னை அனுப்பினவரை விசுவாசிக்கிறவனுக்கு நித்தியஜீவன் உண்டு; அவன் ஆக்கினைத்தீர்ப்புக்குட்படாமல், மரணத்தைவிட்டு நீங்கி, ஜீவனுக்குட்பட்டிருக்கிறான் என்று மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

**கேட்டு விசுவாசித்தால் இருப்பது!**
**கேட்டு விசுவாசித்தால் போவது!**

**பிப்ரவரி 27, 28** யோவா.12:47,48 ஒருவன் என் வார்த்தைகளைக் **கேட்டும்** விசுவாசியாமற்போனால், அவனை நான் நியாயந்தீர்ப்பதில்லை; நான் உலகத்தை நியாயந்தீர்க்கவராமல், உலகத்தை இரட்சிக்க வந்தேன். என்னைத் தள்ளி என் வார்த்தைகளை ஏற்றுக்கொள்ளாதவனை நியாயந்தீர்க்கிறதொன்றிருக்கிறது; நான் சொன்ன வசனமே அவனைக் கடைசிநாளில் நியாயந்தீர்க்கும்.

**வாழவைக்கும் வார்த்தையானவர்!**
**ஏற்றுக்கொள்ளாதவனை ஏற்றுக்கொள்ளாத பரலோகம்!**

**அவசர நடவடிக்கை அவசியம்!** உங்கள் முகவரி மாறினாலோ, 2 துதிமலர் வந்தாலோ உடனே தெரியப்படுத்துங்கள்! அதிக ஜெபத்தோடும், மிகுதியான பணச் செலவோடும், கூடுதல் பிரயாசத்தோடும் வெளியிடும் துதிமலர் வீணாகக் கூடாதல்லவா?



# கவரா? கலரா?

**எங்களைக்கொண்டு அவரை அறிகிற அறிவின் வாசனையை வெளிப்படுத்துகிற தேவனுக்கு ஸ்தோத்திரம். (2கொரி.2:14)**

ஜாய், ஜாய் என்று அழைத்தபடி வீட்டு வாசலில் வந்து நின்றார், டேனி! ரெபெக்காளின் புடவை முந்தியைப் பிடித்தபடி சமையலறையை சுற்றி சுற்றி வந்த 4 வயது நிரம்பிய ஜாய், டேனியின் குரல் கேட்டதும், 'அம்மா, அம்மா.. நம்ம வீட்டுக்கு மாமா வந்திருக்காங்கபோல, அவுங்க கூப்பிடுகிற சத்தம் கேட்குதுமா' என்று சொல்லிக் கொண்டே வாசலை நோக்கி ஓடினாள்.

பயங்கர உற்சாகத்தோடு வேகமாக ஓடிவந்த ஜாயை, ஆசையாய் தூக்கினார் டேனி. ஜாய்க்கு தன் மாமா என்றால் கொள்ளை பிரியம். மாமாவுக்கும் ஜாய்மேல் அதிக பாசம். எப்ப ஜாயைப் பார்க்க வந்தாலும் அவர் சாக்லேட் வாங்கி வருவது வழக்கம். சாக்லேட் கவர்தான் பளபள என்றிருக்குமே.

அன்றும் அப்படியே 2 சாக்லேட்டை வாங்கி வந்திருந்தார். ஒன்றை எடுத்து அதன்மேல் சாதாரண பேப்பரை சுற்றி வைத்திருந்தார். மற்றொன்றை அப்படியே வைத்திருந்தார். கண்டிப்பாக மாமா சாக்லேட் வாங்கி வந்திருப்பாங்க என்ற எதிர்பார்ப்போடு மெதுவாக சட்டை பாக்கெட்டை ஜாய் பார்க்க, டேனி சிரித்தபடி சாதா பேப்பரில் சுற்றி இருந்த சாக்லேட்டை நீட்டினார். ஜாய் அதை தயக்கத்தோடு வாங்கினாள். அடுத்ததாக மினுமினுப்பான பேப்பரில் இருக்கும் சாக்லேட்டை நீட்டினார். அதையோ வேகமாக வாங்கிக் கொண்டாள். உடனே டேனி, 'குட்டிமா, இது இரண்டுமே ஒரே சாக்லேட்தான். இன்று உன்னோடு வம்பு இழுத்து விளையாடலாமே என்றுதான் இப்படி செய்தேன்' என்றார். உடனே ஜாய், 'மாமா இந்த சாக்லேட்டில் சுற்றப்பட்ட கவரே இவ்வளவு அழகாக மின்னுதே. இதற்குள் இருக்கிற சாக்லேட் எவ்ளோ நல்லாயிருக்கும்னு நினைத்தேன். அதனால்தான் இந்த சாக்லேட்டை உடனே வாங்கிக் கொண்டேன்' என்று தன் மழலை குரலில் கூற, ஒரு நிமிடம் மாமா அசந்து போனார்.

**எதிரொலி:**

அனைவரையும் ஈர்க்கும்படி கலர் பேப்பரில் சுற்றி வைத்திருக்கிற சாக்லேட்போல, நமக்குள் வாழ்ந்து கொண்டிருக்கிற இயேசுவை தாங்களும் பெற்றுக்கொள்ள வேண்டும் என எல்லாரும் ஆசைப்படும்படி நம் சொல், செயல், நடக்கை எல்லாம் இருக்க வேண்டும் அல்லவா!

**எடுக்கவேண்டிய தீர்மானம்:**

**கனிவான பார்வை, அன்பான விசாரிப்பு, சரியான புரிந்துகொள்ளுதல், பரிவான உதவி... இப்படி அன்றாடம் சந்திக்கிற சூழ்நிலைகளில் எல்லாம் பலரும் விரும்பும்படி இயேசுவை பிரதிபலித்து காட்டுவேன் என தீர்மானம் எடுப்போமா!!**

# இருக்கலாம்... இருக்கக்கூடாது...

## வருகையைக்குறித்து முன்னறிவிக்கப்பட்ட **அடையாளம்:**



கடைசி நாட்களில் **கொடிய காலங்கள்** வரும் என்று அறிவாயாக. எப்படியெனில், மனுஷர்கள் . . . **தற்பிரியராய் . . .** இருப்பார்கள்(2தீமோ.3:1-5)

**உலகம் அந்திகிறிஸ்துவை வரவேற்க ஆயத்தமாகிறது. தேவபிள்ளைகளான நாம் வரவிருக்கிற இயேசுவோடு செல்ல ஆயத்தமாகிக் கொண்டிருக்கிறோம். வருகை நெருங்கியதின் அடையாளமாய் தற்பிரியராய் இருக்கிற பலர், நம் அருகில் கூட இருக்கலாம், ஆனால் அதில் ஒருவராய் நாம் இருக்கக்கூடாது!**

நான் நல்லா இருக்கணும், என்னை எல்லாரும் மதிக்கணும், என்னை பாராட்டணும், நான் முன்னேறணும் .... இப்படிப்பட்ட நினைவுகள் மேலோங்கி செயல்படும் தலைமுறையில் நாம் வாழ்ந்து கொண்டிருக் கிறோம். மற்றவர்கள் பாதிக்கப்பட்டாலும் பரவாயில்லை, எனக்கு வேலை கிடைக்க வேண்டும் .... பிறருடைய உழைப்பிற்கான அங்கீகாரத்தை என் பெயரில் திருப்பி, பாராட்டையும், பரிசையும் நான் தட்டி செல்ல வேண்டும்.... அடுத்தவர்களை பாதித்தாவது நான் பதவிஉயர்வை அடைய வேண்டும்.... இப்படிப்பட்ட மனிதாபிமானமற்ற நடக்கைகள் எங்கும் மலிந்திருப்பது, நாம் கொடிய கடைசி நாட்களில் நிற்கிறோம் என்பதை நிரூபிக்கிறது.

யார் வேண்டுமானாலும் தற்பிரியராய் நடந்துகொள்ளலாம். ஆனால் வருகையில் இயேசுவோடு செல்ல வாஞ்சிக்கிற நாம் அப்படி நடக்கவே கூடாது அல்லவா? நாம் நமக்கே **பிரியமாய் நடவாமல்**, .. நம்மில் ஒவ் வொருவனும் **பிறனுடைய** பக்திவிருத்திக்கேதுவான நன்மையுண்டா கும்படி அவனுக்குப் **பிரியமாய் நடக்கக்கடவன்**(ரோம.15:1,2) என நமக்குத் தானே வேதத்தில் எழுதி கொடுக்கப்பட்டிருக்கிறது. என் நலனை கருத் தில் கொண்டே செயல்படும் தன்னலம் மாறி, பிறருடைய நன்மையை எண்ணிப் பார்க்கிற மனப்பக்குவம் நமக்குண்டாகட்டும்.

நான், என் நலன், என் குடும்பம், என் பிள்ளைகள், என் எதிர்காலம் என்ற குறுகிய வட்டத்திலேயே சுழலாமல், அடுத்தவரின் உணர்வுகளை மதித்து, அவர்களும் வாழ்ந்திருக்கும்படி பரந்த வட்டத்தில் செயல்பட வேண் டியவர்கள் நாம். மனுஷர் **உங்களுக்கு** எவைகளைச் செய்ய விரும்பு கிறீர்களோ, அவைகளை நீங்களும் **அவர்களுக்குச்** செய்யுங்கள்(மத்.7:12) என்றுதானே இயேசு நமக்குக் கற்பித்திருக்கிறார். சுற்றி இருப்பவர்கள் என்னை புரிந்துகொள்ள வேண்டும் என்பதையும், என்னை புண்படுத் தவோ பாதிக்கவோ கூடாது என்பதையும் எந்தளவு விரும்புகிறோமோ, அந்தளவு நாம் மற்றவர்களிடம் நடந்து கொள்வதுதானே இயேசுவை பின் பற்றுவதாக சொல்லும் நம் வழியாய் இருக்கவேண்டும். சுயநலத்தை அகற்றி, பொதுநலத்தை அப்பியாசித்து குடும்பமாய் வருகையில் செல் லும் பாக்கியத்தை அடைவோம்.



# இது செய்தி: கேட்டதும் கேட்க வைத்ததும்!!

சகோதரி சுனித்தா சுகுமார்

| | |
|---|---|
| காதில் விழுந்தது அச்சுறுத்தல், | மறுமொழியோ அசாதாரணம் |
| காதில் விழுந்தது அதட்டல், | மறுமொழியோ அவசியம் |
| காதில் விழுந்தது அதைரியம், | மறுமொழியோ அபூர்வம் |
| காதில் விழுந்தது ஆக்ரோஷம், | மறுமொழியோ அதிகாரம் |

பிப்ரவரி மாத புதிரில் இடம்பிடித்த நபர் யார்? எந்த வேதாகம சம்பவத் தின் பின்னணி இது? கண்டுபிடித்து விட்டீர்களா? போன மாதம்போலவே, இம்மாத புதிரிலும் தாவீது-கோலியாத் சம்பவமே இடம்பெறுகிறது. இராட் சத கோலியாத்தின் அச்சுறுத்தும் சவாலை கேட்ட தாவீது, **அதை பொருட் படுத்தாமல்** வெற்றியாளரின் சன்மானம் பற்றிய அசாதாரண மறுமொழியை சுற்றியுள்ளவரின் காதுகள் கேட்க அனுப்பினார். அண்ணனின் அதட்டல் கேள்விகளை கேட்ட தாவீது, **அதை கண்டுகொள்ளாமல்** தன் அவசிய மறு மொழியை அண்ணன் கேட்க வைத்தார். சவுல் ராஜாவின் அதைரியப்படுத் தும் அங்கலாய்ப்பை கேட்ட தாவீது, **அதை உள்வாங்காமல்** தேவனின் அபூர்வ நடத்துதலை மறுமொழியாக்கி தன் விசுவாச முடிவை ராஜா கேட் கும்படி செய்தார். எதிரான கோலியாத்தின் ஆக்ரோஷ முன்னறிவிப்பை கேட்ட தாவீது, **அதை கருத்தில் கொள்ளாமல்**, தன் அதிகார மறுமொழியை எதிரி கேட்கும்படி சொன்னார். புதிரின் 4 வரிகளும் தன் காதில் கேட்டதை தாவீது முடிவாக்காமல், தான் பிறரை கேட்க வைத்ததையே முடிவாக்கியதை எடுத்துக் காட்டுகிறது. இந்த சிறப்பம்சத்தை விளக்கமாய் தியானிக்க வாருங்கள்!

## அச்சுறுத்தலும் அசாதாரணமும்!



யுத்தக்களத்திற்குள் நுழைந்த தாவீதின் காதுகளில், 'இஸ்ரவேலுடைய சேனைகளை நிந்தித்தேன்; நாம் ஒருவ ரோடு ஒருவர் யுத்தம்பண்ண ஒருவனை விடுங்கள்' என பெலிஸ்த சேனைகளிலிருந்து வந்த கோலியாத்தின் அச் சுறுத்தும் சவால் விழுந்தது (1சாமு.17:10,23). அதை கேட்ட தாவீது, 'இந்தப் பெலிஸ்தனைக் கொன்று .. நிந்தையை நீக்குகிறவனுக்கு என்ன செய்யப்படும்' (1சாமு.17:26) என கோலியாத்தை ஜெயிக்கிறவனைப் பற்றிய தன் அசாதாரண மறுமொழியை தன்னண்டையில் நிற்கிறவர்களின் காதுகள் கேட்கும்படி செய்தார்.

## எதை கேட்டார் ?

யுத்தகளத்திலிருந்த அனைவரின் காதுகளிலும் எதிரியின் அச்சுறுத்தும் சவால் விழுந்தது. அதை ஏற்க ஒருவருக்குக்கூட துணிவில்லை. எதிரியின் தோற்றமும், ஆயுதமும், பலமும், பயிற்சியுமே அவர்கள் எண்ணத்தில் மேலோங்கி இருந்ததால், ஒவ்வொரு நாளும் எதிரியின் சத்தத்தை கேட்டதும் பின்னிட்டு ஓடினார்கள். தாவீதும் கோலியாத்தின் அதே சவாலை கேட்டார். ஆனால் அதற்கு மதிப்பளித்து அதிலேயே நின்றுவிடவில்லை.

இதை தான் கேட்பேன், இதை கேட்கவே மாட்டேன் என்று முடிவு செய்கிற உரிமை ஒருவருக்கும் இல்லை. அதே சமயம் காதில் விழுகிற எவைகளை சிந்தைக்குள் எடுத்துச் செல்லுவது, எவைகளை சிந்தைக்குள் வரவிடாமல் தடுப்பது என்பதை தெரிந்தெடுக்கும் உரிமை நமக்கு உண்டு. நம் பிரச்சனையையும், சூழலையும், எதிர்காலத்தையும் குறித்த அச்சுறுத்தும் கேள்விகளையோ, எதிர்மறை தகவல்களையோ சுற்றியுள்ளவர்மூலம் எதிரி நம் காதுகளில் அனுப்பிக் கொண்டே இருப்பான். அதன் அடிப்படையிலேயே சவுலின் சேனைபோல மலைத்து நிற்பதோ அல்லது தாவீதைப் போல துணிவதோ நம் கையில்தான் இருக்கிறது. காதுகளில் கேட்கிற 'நடப்பு சவாலின் பின்னணியில் சொல்லப்படுபவை' உண்மை தகவல்தான். என்றாலும் அவைகளையே சிந்தித்து, அதையே நாள்முழுதும் அசைபோட்டு கலங்கி, குழம்பி, பயந்து, சந்தேகப்பட்டு, நடக்காத பாதக எண்ணங்களை நடக்கப் போவதாக கணித்து அதிலேயே நாம் லயித்துவிட வேண்டியவர்கள் அல்ல.

## எதை கேட்க வைத்தார் ?

எதிரியின் அச்சுறுத்தும் கேள்வியை கேட்ட தாவீதின் காதுகளில் எதிரியின் மேல் வெற்றியெடுப்பவனுக்கு என்ன செய்யப்படும் என்பதும் விழுந்தது. சாதாரணமாய் எல்லாரும் முக்கியப்படுத்தும் எதிரியைக்குறித்த காரியங்களை விட்டு, ஜெயிப்பவருக்கான பலனை குறித்த அறிவிப்பிற்கே தாவீது அசாதாரணமாய் முக்கியத்துவமளித்து திரும்ப திரும்ப அதையே கேட்டு தெரிந்துகொண்டார்(1சாமு.17:27,30). எதிரி சொல்வதையே கேட்டுகொண்டிருந்தவர்களிடம், அவனை ஜெயிப்பதைக்குறித்து தாவீது விசாரித்து அதையே அவர்கள் காதுகள் கேட்க வைத்தார். எதிரி அனுப்புகிற பயப்படுத்தும் தகவல்களை கேட்பதிலேயே நின்றுவிடாதீர்கள். விசுவாசித்து, துதித்து, வசன ஆதாரத்தை பிடித்து ஜெயமெடுப்பவருக்கு கிடைக்கும் பலனைக் குறித்த வாக்குகளால் வேதாகம பக்கங்கள் நிறைந்திருக்கிறது. கலங்க வைக்கும் சூழலைப் பற்றி சகமனிதரோடு சம்பாஷிக்கும்போது ஜெயிப்பதைப் பற்றிய முடிவையே அவர்கள் கேட்க வைப்பதுதான் உங்கள் பங்கு. கர்ப்ப காலத்தின் 9 மாத பரிசோதனையின்போதும் 'குழந்தை நன்றாய் இருக்கிறது..சுகப் பிரசவம் உண்டாகும்' என்பதையே மருத்துவர்மூலம் குறிப்பிட்ட ஒரு சகோதரி கேட்டார்கள். கடைசி பரிசோதனையின்போது குழந்தையின் தலை சரியான நிலைக்கு வராததால், அறுவைசிகிச்சை செய்துதான் பிள்ளையை எடுக்க முடியும் என்று சொல்லி, உடனே அதற்காக ஆயத்தப்பட அவசரப்படுத்தினார்கள். 15 நிமிட அவகாசம் ஜெபிப்ப



தற்கு கேட்ட அந்த சகோதரி, 'இயேசுவே, எங்க வீட்டில் மாடும், ஆடும் வளர்க்கிறோம். அவைகள் குட்டியை ஈனுவதை பார்த்திருக்கிறேன். அதற்கு பிரசவம் பார்த்தது, அதை உண்டாக்கிய நீங்கதானே! உங்களால் உருவாக்கப்பட்ட விசேஷமானவள் அல்லவா நான்! நீங்கதானே இப்ப எனக்கும் பிரசவம் பார்க்க வேண்டும்' என உள்ளமுருக பிரார்த்தித்தார்கள். மறுநிமிடம் இருந்த இடத்திலேயே குழந்தை வெளியே வந்தது. எந்த எதிர்மறையிலும் அசாதாரணங்களை சர்வசாதாரணமாய் நிகழ்த்திக்காட்டும் தேவனின் வல்லமையை பிறர் காதுகள் கேட்கவைக்க வேண்டியவர்கள் நாம்! சூழ்நிலையின் போக்கில் பிரச்சனைகளின் தீவிரத்தை மட்டுமே கேட்டு, நாம் சோர்ந்துபோய் தோற்றுப் போகும்படி எதிரி முனைப்பாய் செயல்படுகிறான். தேவவாக்கின் நிறைவேறுதலை நீங்கள் விசுவாசத்தோடு எதிர்பார்த்திருப்பதை உங்களை சுற்றியிருப்பவர் கேட்க வைப்பதே உங்கள் முடிவாகட்டும்.

## அதட்டலும் அவசியமும்!

தன் சகோதரரின் சுகசெய்தியை அறிய போன தாவீதின் காதுகளில், 'நீ இங்கே வந்தது என்ன? வனாந்தரத்திலுள்ள அந்தக் கொஞ்ச ஆடுகளை நீ யார் வசத்தில் விட்டாய்? யுத்தத்தைப் பார்க்க அல்லவா வந்தாய்? உன் துணிகரத்தையும் உன் இருதயத்தின் அகங்காரத்தையும் அறிவேன்' என மூத்த சகோதரன் எலியாப் கோபத்தோடு அதட்டிய கேள்விகளே விழுந்தது. 'அதற்குத் தாவீது: நான் இப்பொழுது செய்தது என்ன? நான் வந்ததற்கு முகாந்தரம் இல்லையா' (1சாமு.17:28,29) என அவசியமானதை ஆணித்தரமாய் அதே அண்ணன் கேட்க வைத்தார்.

## எதை கேட்டார் ?

சவாலிடுகிற கோலியாத்தை ஜெயிக்க போவது சந்தேகமின்றி நான்தான் என, ஜெயிப்பவருக்கான அறிவிப்பை விசாரித்த தாவீதைப் பார்த்து, அண்ணனுக்கு பொங்கிவந்தது பெருமிதம் அல்ல, கோபம்தான். ஆடுகளை தாவீது பொறுப்பாய் ஒப்படைத்துவந்த உண்மையை அறியாமல் அவரை குற்றப்படுத்தினார். தகப்பனுக்கு கீழ்ப்படிந்து வந்த தாவீதை யுத்தத்தை பார்க்கும் நோக்கத்தோடு வந்ததாக சாடினார். துணிகரமும், அகங்காரமும் உடையவனாக தன்னை அரட்டியதையே தாவீது கேட்டார். தாவீதின் பரிவும், பாசமும், பொறுமையும் கேள்வியானது. அண்ணன் கோபப்பட்டு, கோபப்படுத்தும் வார்த்தைகளை பேசுவதை கேட்ட தாவீது, பதிலுக்கு எதிர்க்கவில்லை. அநியாய குற்றச்சாட்டாக எண்ணி அமைதியாயிருக்கவும் இல்லை. தான் காதில் கேட்டதை முடிவாக்கி திரும்பிவிடவுமில்லை. தேவநடத்துதலை விளங்காமல் அக்கறையோடு பேசுவதாக எண்ணி நெருங்கியவர்களிடமிருந்து வரும் குற்றச்சாட்டை நீங்களும் கேட்க நேரிடலாம். தவறாய் புரிந்து கொள்ளப்பட்டு, விமர்சிக்கப்பட்டு நீங்களுங்கூட அரட்டப்படலாம். தேவநடத்துதலுக்கான ஆதரவும், ஒத்துழைப்பும் நீங்கள் எதிர்பார்க்கிற எல்லையிலிருந்து கிடைக்காமற் போகலாம். அதட்டலை கேட்டு ஆமோதிக்கவோ, அமைதியாயிருக்கவோ, மாற்று முடிவை எடுக்கவோ முன்வராத தாவீதே நம் முன்மாதிரி.

## எதை கேட்க வைத்தார் ?

அண்ணன்மாரை விசாரித்து அடையாளத்தோடு திரும்ப தகப்பனால் தாவீது அனுப்பப்பட்டது உண்மைதான். ஆனால் பரம தகப்பனோ தேசத்திற்கான வெற்றி அடையாளத்தோடு திரும்பவே யுத்த களத்திற்கு தாவீதை அனுப்பினார். அண்ணனின் அதட்டலை முடிவாக்காமல், 'நான் வந்ததற்கு முகாந்தரம் இல்லையா' என்ற அவசிய கேள்வியை தாவீது அதே அண்ணன் காதுகள் கேட்க வைத்து, உரையாடலுக்கு முற்றுப்புள்ளி வைத்தார். தன்னுடைய ஒவ்வொரு அசைவின் பின்னணியிலும் தேவ கரத்தின் செயல்பாடு இருப்பதை அனுபவிக்கிற நெருக்கம் தாவீதுக்கு இருந்ததால்மட்டுமே, தேவன்தான் தன்னை யுத்த களத்திற்கு அழைத்து வந்திருக்கிறார் என்றும், அதற்கான முகாந்தரமும் நோக்கமும் தேவனுக்கு உண்டு என்றும் தாவீது உணர்ந்திருந்தார்.

தேவநடத்துதலுக்கு உங்களை முற்றிலும் ஒப்படைத்திருந்தால் எதுவும் உங்கள் வாழ்வில் தற்செயலாய் நடக்காது. ஒவ்வொரு அழைப்புக்கு பின்னும் 'தேவசெயல்' புதைந்திருக்கிறது என்பதே மறுக்கமுடியாத உண்மை. நீங்கள் எதிர்பார்க்காத நிகழ்வுகள் குறுக்கிட்டு, வழக்கமான கடமையில் இருந்து உங்களை திசைதிருப்பும்போது தேவன் இதன்மூலம் என்ன செய்ய விரும்புகிறார் என்பதை அறிய கருத்தாயிருங்கள். தேவன் முன்குறித்ததை விட்டு நீங்கள் திசைதிரும்பும்படி கேள்வியெழுப்புகிறவரை இனம் கண்டு கொள்ளுங்கள். அவர்கள் பெரும்பாலும் நீங்கள் மறுத்துப் பேச முடியாத நெருங்கிய உறவு வட்டாரத்தில் இருப்பார்கள். அன்றுமட்டும் அண்ணனின் அதட்டிய கேள்விகளை கேட்டு தாவீது திரும்பியிருந்தால்...என்ன நடந்திருக்கும்? தேவன் அழைத்து வந்த முகாந்தரம் வீணாகி இருக்குமே. அப்படியே உங்களைக்குறித்த தேவனின் நடத்துதல் தற்சமயம் புரியாத புதிராய் இருக்கலாம். புதிர் படங்களை இணைத்த முடிவின் பின்னர்தான் எதுஎது எங்கெங்கே நேர்த்தியாய் பொருந்தியிருக்கிறது என்று புரியும். அதுபோலத்தான், எந்த முகாந்தரத்தின் பின்னணியில் தேவன் செயல்படுகிறார் என்ற முழு விபரத்தையும் நீங்கள் பின்னர்தான் புரிய முடியும். அதுவரையும் எதை கேட்பது, எதை கேட்க வைப்பது என்பதில் தெளிவாயிருப்பது முக்கியம்.

## அதைரியமும் அபூர்வமும்!



எதிரியை நேருக்குநேர் மோத முன்வந்த தாவீதின் காதுகளில், 'நீ இந்த பெலிஸ்தனோடே எதிர்த்து யுத்தம் பண்ண உன்னால் ஆகாது. நீ இளைஞன், அவனோ தன் சிறுவயதுமுதல் யுத்தவீரன்' (1சாமு.17:33) என சவுல் ராஜா அதைரியப்படுத்தியதே விழுந்தது. அதை கேட்ட தாவீது, 'என்னைச் சிங்கத்தின் கைக்கும் கரடியின் கைக்கும் தப்புவித்த கர்த்தர் இந்த பெலிஸ்தனுடைய கைக்கும் தப்புவிப்பார்' (1சாமு. 17:37) என தன்னை மேற்கொள்ள வைத்த தேவனின் அபூர்வ செயலை விவரித்து, அவர் செய்ய விருப்பதை விசுவாச முன்னறிவிப்பாக சவுலின் காதுகள் கேட்க வைத்தார்.



## எதை கேட்டார் ?

40 நாட்களாய் கோலியாத்தின் சவாலை கேட்டு **கலங்கி கொண்டிருந்த** சவுலிடம் கோலியாத்தினிமித்தம் ஒருவருடைய இருதயமும் **கலங்க வேண்டியதில்லை.** நான் போய் யுத்தம்பண்ணுவேன் (1சாமு.17:11,32) என யுத்தகளத்திற்கு அன்று வந்திருந்த தாவீது முன்வந்தபோது, அதை சவுல் வரவேற்பதையோ, ஊக்குவிப்பதையோ அவர் காதுகள் கேட்கவில்லை. யுத்தத்தையே பார்த்திராத இளைஞனான தாவீது ஆர்வக் கோளாறில் முன் வருகிறானோ என சவுல் நினைத்துவிட்டார் போலும். உன்னால் ஆகாது, இளைஞனான உன் வயதும் ஒத்துவராது, சிறு வயதிலிருந்தே யுத்த வீரனான அவனுடன்மோத உன்பின்னணியும்போதாது என அதைரியப்படுத்துவதையே தாவீது கேட்டார். தன்மீது அக்கறையோடு சவுல் சொல்வது தெரிந்தது என்றாலும், அதை கேட்டவுடனே, 'நீங்க என் நன்மைக்காகதான் சொல்கிறீர்கள். அதிரடியாய் முடிவெடுத்து விட்டேன். நல்ல வேளை எனக்கு எடுத்து சொன்னீர்கள்' என அதற்கு இணங்கவில்லை. இப்படித்தான் நீங்களும் தேவநோக்கத்தை உணர்ந்து, அர்ப்பணிப்போடு நிறைவேற்ற ஆர்வமாய் முன்வரும்போது, அதை கேட்டு உற்சாகப்படுத்துகிறவர், பாராட்டி ஊக்குவிக்கிறவர், முன்னேற தைரியப்படுத்துகிறவர் வரிசையில் இருப்போரைவிட, எதிர்மறைகளை பெரிதுபடுத்துவோரையே பார்க்க முடியும். உங்கள்மேல் பரிவோடும், பாசத்தோடும் சொல்வதாக நம்பப்பண்ணும் இப்படிப்பட்ட வார்த்தைகளை கேட்கும்போது, தேவதிட்டத்தை விட்டு உங்களை விலகப்பண்ணும்படி எதிரி தன் கையாட்களை பயன்படுத்துவதை புரிந்து கொள்ளுங்கள். அவர்கள் சொல்லுவதற்கு தலையசைக்காமல், தாவீதைப் போல தேவதிட்டத்திற்கு தலைதாழ்த்த கவனமாயிருங்கள்.

## எதை கேட்க வைத்தார் ?

தேவன் தன்னை தனியாளாய் சந்திக்க வைத்து வெற்றியெடுக்க வைத்த அபூர்வ அனுபவங்களை சவுல் ராஜாவிடம் அடுத்தடுத்து தாவீது அடுக்கினார். தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட ஆடுகளில் ஒரே ஒரு ஆட்டை கூட விட்டுக் கொடுக்காமல் சிங்கத்தின் வாய்க்கும், கரடியின் வாய்க்கும் தப்புவிக்க தன் ஜீவனையும் பணயம் வைத்து மேற்கொண்டதையும் சொன்னார். எப்படி தாவீது தன் ஆடுகளை **சிறியதாய் எண்ணி** விட்டுக்கொடுக்கவில்லையோ அப்படியே சிங்கத்தையும், கரடியையும் **பெரியதாய் எண்ணி** பயப்பட்டு பின் வாங்கவும் இல்லை. இளைஞனாயினும் தேவதுணையோடு தன்னை அபூர்வ சாதனை படைக்க வைத்தவர், கோலியாத்துக்கும் தப்புவிக்கிறவர் என அவரையே விசுவாசித்து, ஒருவரும் சொல்லமுடியாத அபூர்வ செயலை சவுலின் காதுகள் கேட்கவைத்தார், தாவீது. நடப்பு உண்மையையே பெரிதுபடுத்தி பேசி, உங்களை மனமடிவாக்குவோரின் வார்த்தைகளை கேட்டு சோர்ந்துபோய் அதைரியத்தோடு நின்று விடாதீர்கள். அபூர்வ வழிகளில் தேவன் இதுவரை உங்களை ஆச்சரியமாய் வழிநடத்தி வந்தது உண்மைதானே! தேவவல்லமையை கொண்டாடும்படி கற்பனைக்கெட்டாத விதங்களில் நடத்திய எத்தனை அனுபவங்களை அவர் உங்களுக்கு தந்திருக்கிறார். தற்போது நீங்கள் சந்திக்கிற எதிரான சூழலிலும் நம்பிக்கை

இழக்காமல் முன்னேறுங்கள். அதைரியப்படுத்தும் கூற்றுகளால் பின்வாங்காமல் உறுதியாயிருங்கள். ஜனவரி மாதத்திலே முகவரிகளை சேமிக்கும் கணிணி வேலைசெய்யவில்லை. பல விதங்களில் முயற்சித்தும் பலனளிக்கவில்லை. இத்தனை காலமாக நாங்கள் துதி மலர் அனுப்பிய முகவரிகள், கடந்த 7 மாதங்களாய் துதி மலர் புதிதாய் அனுப்ப கேட்டவர்களின் முகவரிகள், வாசகர்கள் வீடு மாறியதால் திரும்ப அனுப்பப்பட்ட துதிமலர்களின் நிமித்தம் நீக்கப்பட்ட முகவரிகள் எல்லாம் அதில்தான் பதிவு செய்யப்பட்டிருந்தது. அது **hardware** பிரச்சனை என்பதால் எடுப்பது சாத்தியமே இல்லை என்பதுதான் நடப்பு உண்மை. அந்த நடப்பு உண்மை பலர் வாயிலாக திரும்ப திரும்ப சொல்லப்பட்டது. என்றாலும் தேவன் ஆச்சரியமாய் வெவ்வேறு பிரச்சனைகளில் பல முறை கைகொடுத்ததை விசுவாசித்து, இப்போதும் கைகொடுப்பார் என ஜெபத்தோடு எதிர்பார்த்திருந்தோம். 10 நாட்களுக்குப் பிறகு, ஒரு முகவரிகூட விடாமல் எல்லாவற்றையும் திரும்ப பெறும்படி கர்த்தர் செய்தார். பழைய மென்பொருள் (software) மாற்றப்படும் நன்மையும் அதோடுகூட நிகழ்ந்தது. அன்றும் இன்றும் விசுவாசிப்பவருக்கு தேவன் தம் வல்லமையை நிரூபிப்பவர். எதிர்மறை கூற்றுகளுக்கு இணங்கிவிடாமல், தேவன் நடத்திவந்த அபூர்வ ஆதாரங்களின் அடிப்படையில் விசுவாசமாய் நீங்கள் சொல்வதையே மற்றோர் கேட்கவைக்க தீவிரமாயிருங்கள்.

## ஆக்ரோஷமும் அதிகாரமும்!



கோலியாத்தை எதிர்க்க முன்னேறிய தாவீதின் காதுகளில், 'என்னிடத்தில் வா; நான் உன் மாம்சத்தை ஆகாயத்துப் பறவைகளுக்கும் காட்டு மிருகங்களுக்கும் கொடுப்பேன்' (1சாமு.17:44) என ஆக்ரோஷமாய் எதிரி முழங்கியதே விழுந்தது. அதைக் கேட்ட தாவீது 'இன்றைய தினம் கர்த்தர் உன்னை என் கையில் ஒப்புக்கொடுப்பார். அதனால் இஸ்ரவேலின் தேவன் ஒருவர் உண்டு என்று பூலோகத்தார் எல்லாரும் அறிந்துகொள்ளுவார்கள். கர்த்தர் ரட்சிக்கிறவர் என்று இந்த ஜனக்கூட்டமெல்லாம் அறிந்துகொள்ளும்' (1சாமு.17:46-47) என தன் நிச்சய முன்னறிவிப்பை எதிரி கேட்க வைத்தார்.

## எதை கேட்டார் ?

எதிரியை தூரத்தில் பார்க்கும்போதே இஸ்ரவேலர் அவன் முகத்திற்கு விலகி ஓடிக் கொண்டிருந்தார்கள். அப்படிப்பட்ட நெடிய உருவமும், பயங்கர தோற்றமும் உடைய, வெண்கல தற்காப்பு ஆயுதங்களால் சிறிய இடைவெளி கூட விடாமல் முழுவதும் மறைக்கப்பட்டிருந்த கோலியாத்தை பக்கத்தில் நெருங்க நெருங்க இன்னும் கோரமாய்தான் தெரிந்திருப்பான். அருகில் வரவர பயந்து தாவீது திரும்பி விடுவான் என எதிரி அவரை அசட்டை பண்ணினான். பின் ஆத்திரம் பொங்க சபித்தான். அதற்கும் பின்னடையாத தாவீதை பார்த்து ஆக்ரோஷமாய் உன் மாம்சத்தை இன்று பறவைகளுக்கு உணவாக்கப் போகிறேன் என பயமுறுத்தினான். அதைக் கேட்டதும் தாவீது பயந்து பின் திரும்பிவிடவில்லை. எடுத்த முடிவை திருத்திவிடவுமில்லை. தேவ திட்டத்தை துணிச்சலோடு நிறைவேற்றுவதிலிருந்து நம்மை எதிரி திரும்பப்பண்ண



பல யுக்திகளோடு ஆக்ரோஷமாய் மோதுகிறான். தேவதிட்டத்தை கைவிடும்படி நடக்காததை நடக்கப் போவதாக நம்பும்படி முன்னறிவிப்பான். நடக்காத எதிர்மறைகள் அடுத்தடுத்து நடக்கவிருப்பதாக முன்னறிவிப்பவர்களை எதிரி அனுப்புவான். தேவதிட்டம் நிறைவேற நாம் பிடிவாதமாயிருப்பதை தளர்த்தி விடும் ஒரே நோக்கத்தோடு அவன் அனுப்பும் தகவலை கேட்டு, ஒருபோதும் முன் வைத்த காலை பின் வைத்துவிட வேண்டாம்.

## எதை கேட்க வைத்தார் ?

எதிரியின் முன்னறிவிப்பு அவனுடைய சரீர பலத்தையும், ஆயுத பலத்தையும், பயிற்சி பலத்தையும், அனுபவ பலத்தையும் சார்ந்தது என்பதை அறிந்து கொண்ட தாவீது, கர்த்தரை துணையாக கொண்டு முன்னேறினார். கர்த்தர் உன்னை என் கையில் ஒப்புக்கொடுப்பார் என உறுதியான நிச்சயத்தோடு, அதிகார தொனியில் தாவீது முழங்கினார். அந்த அதிகாரத்தின் பின்னணியில் தாவீது சார்ந்திருந்தது, கர்த்தரின் பலத்தையும், அவருடைய நாமத்தின் பலத்தையுமே! தோல்வியை கண்டிராத இராணுவங்களின் தேவனாகிய சேனைகளுடைய கர்த்தரின் நாமத்தின் பலம் எத்தனை வலிமையானது. அது மகத்தான ரட்சிப்பை ஏற்படுத்த போகிறது என்பதில் அவருக்கு சந்தேகமே இல்லை. பார்வையாளராய் வேடிக்கை பார்த்தபடி கோலியாத்தின் அணியிலும், சவுலின் அணியிலும் இருக்கிற எல்லாரும் மட்டுமல்ல, பூலோகத்தில் உள்ள எல்லாரும் இஸ்ரவேலுக்காக யுத்தம் பண்ணி அவர்களை ரட்சிக்கும் கர்த்தரை அறியவேண்டும் என்ற பிரதான நோக்கத்தை அதிகாரப் பூர்வமாய் அறிவித்து, அதையே எதிரி கேட்க வைத்தார். இளைஞனும், பாதுகாக்கிற ஆயுதங்கள் அற்றவரும், இராணுவ உடை இல்லாதவருமாய் இருந்த தாவீது முழங்குவது, பார்வைக்கு கேலியாய் தோன்றினாலும், ஆக்ரோஷமாய் எதிரி முன்னறிவித்தது அல்ல, அதிகாரப்பூர்வமான தாவீதின் முன்னறிவிப்பே நடந்தது.

உங்களுடைய நடப்பு நிலையும், சம்பவிக்கிற காரியங்களும், எதிரி தரப்பிலிருந்து அனுப்பும் முன்னறிவிப்புகளும் முற்றிலும் பாதகமாய் இருந்தாலும் தளர்ந்துவிடாமல் தேவன் நம்பப்பண்ணிய வாக்குகளை அதிகாரப் பூர்வமாய் அறிவியுங்கள். எதிர்மறையாய் முன்னறிவிப்பவர்களின் கருத்துக்களை முடிவாக்காமல், தேவன் சொன்னவைகளைக்குறித்த உங்கள் முன்னறிவிப்பையே அவர்கள் காதுகள் கேட்கிற முடிவாக்குங்கள். தேவநாமம் மகிமைப்படுவதும், தேவனையும், அவர் வல்லமையையும் எல்லாரும் அறிந்துகொள்ளுவதுமே உங்கள் நோக்கமாயிருக்கட்டும். தேவராஜ்யத்தின் அதிகாரத்தோடு தாவீது சொன்னதை எல்லாம் அன்று அப்படியே நிறைவேற்றிய தேவன், இன்றும் நீங்கள் விசுவாசத்தோடு முன்னறிவிப்பதை 'உன் **விசுவாசத்தின்படியே** உனக்கு ஆகக்கடவது' என்று அப்படியே நிறைவேற்றுவார். சாதக சூழலையும், சாதக நபர்களையும், சாதக பலத்தையும் வைத்தது உங்கள் அதிகார பலம் அல்ல, தேவ நாமத்தின் அதிகாரத்தையே சார்ந்தது என்று உலகம் அறியட்டும்.

**தாவீது காதில் கேட்டதை எடுத்துக்கொண்ட விதமும், கேட்கவைத்த மறுமொழியும் என்றும் நாம் பின்பற்றும் நற்பாடமாகட்டும்!**

# பறந்ததும் இறங்கியதா?

> 'கர்த்தருடைய **பர்வதத்திலே** பார்த்துக்கொள்ளப் படும்' (ஆதி.22:14)

அடர்ந்த காடு! ஓங்கிவளர்ந்த மரங்கள்! கொட்டும் மலைச் சாரல்! அவ்வப்போது வந்து போகும் இடி மின்னல்! இதற்கிடையே எதையும் பொருட்படுத்தாமல், அங்கிருந்த செங்குத்தான மலையின் மேல் கம்பீரமாய் அமர்ந்திருந்தது, கழுகுகளின் கூட்டம்!

பார்ப்பதற்கு சிறியதாய் இருந்தாலும், கழுகுகளோடு மோதும் கருங்குருவி என்ற பறவை ஒன்று திடீரென்று அங்கு வந்தது. கூட்டமாய் அமர்ந்திருந்த கழுகுகளில் ஒரு கழுகின்மேல் அமர்ந்து அதின் கழுத்தை கொத்த ஆரம்பித்தது. கருங்குருவியால் தாக்கப்பட்ட கழுகோ அதை கண்டு கொள்ளவே இல்லை. திரும்ப எதிர்த்து போராடாமல், பதிலுக்கு தாக்காமல் அது அமர்ந்திருந்த இடத்தை விட்டு அப்படியே பறக்க ஆரம்பித்தது. கருங்குருவியும் விடாமல் தொடர்ந்து கழுகின் மேல் அமர்ந்து கொத்தி கொண்டே சென்றது.

கழுகு எதற்கும் அசராமல், உயர உயர பறந்தது. பூமியிலிருந்து மேலே செல்ல செல்ல காற்றில் உள்ள ஆக்ஸிஜன் அளவு குறைந்து கொண்டே போகும். கழுகு உயரப் பறப்பதற்கு உருவாக்கப்பட்டது என்பதால், அது உயர உயர பறந்தாலும், அந்த குறைவான ஆக்ஸிஜன் அதற்கு போதுமானது. ஆனால் குறைவான ஆக்ஸிஜனில் கருங்குருவிக்கு தாக்குப்பிடிக்க முடியாது. அதனால் அதுவரையும் தொடர்ந்து கொத்திக் கொண்டே போன கருங்குருவி ஆக்ஸிஜன் சப்ளை குறையவும், மூச்சுவிட முடியாமல் அப்படியே உயரத்தில் இருந்து கீழே இறங்கி விட்டது. அதன் பின் கழுகு நிம்மதி பெருமூச்சுடன் தன் இருப்பிடத்தை நோக்கி இறங்கியது.

**எதிரொலி:**
உயர உயர பறக்கிற கழுகுபோல, ஒத்தாசை அனுப்புகிற பர்வதத்திற்கு ஜெபத்தோடு காரியங்களை கொண்டு போனால் போதும். ஒருவராய் பெரிய அதிசயங்களை செய்கிறவர் அதை நேர்த்தியாய் பார்த்து கொள்வார். பாதித்த பிரச்சனை காணாமற் போகும்.

**எடுக்கவேண்டிய தீர்மானம்:** சந்திக்கிற போராட்டங்களில் கருங்குருவிபோல, வேதனைப்படுத்தும் மனுஷரோடு பல விதங்களில் விடாமல் போராடி, தீர்வை பெற முயற்சிப்பதை விட்டுவிட தீர்மானியுங்கள்! தேவன் பார்த்துக்கொள்ளும்படி விட்டுவிட்ட பிரச்சனைகளில் நாம் இறங்கி போராடுவது, நம் நேரத்தையும், பெலனையுமே வீணாக்குகிறது!



# இது செய்தி
# பின்னாலே காக்கிறவர்

**சகோ.சுரேஷ் ராஜதுரை**

***கர்த்தர் உங்கள் முன்னே போவார்; இஸ்ரவேலின் தேவன் உங்கள் பிறகே உங்களைக் காக்கிறவராயிருப்பார்' (ஏசாயா 52:12).***

இயேசு நமக்கு முன்னின்று நடத்துகிறவர் (Guide) மாத்திரமல்ல, நமக்குப் பின்னாலே நம்மைக் காக்கிறவராகவும் இருக்கிறவர் (Guard).

*The Lord will go before you, and the God of Israel will be your rear guard*

நற்கிரியைகளை நம்மில் தொடங்கினவர் மாத்திரமல்ல, அதை முடிப்பதில் மிகவும் கவனமுடையவராயிருக்கிறவர் (பிலிப்.1:6). ஒரு காரியத்தின் துவக்கத்தைப்பார்க்கிலும் அதின் முடிவு நல்லது (பிர.7:8). நன்றாக துவங்கி ஆனால் முடிக்க முடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறாயா? கர்த்தர் மாத்திரமே நீ விரும்புகிற எதிர்பார்க்கிற முடிவை கொடுக்கமுடியும்.

## சிவந்த சமுத்திரம்

***'அப்பொழுது இஸ்ரவேலரின் சேனைக்கு முன்னாக நடந்த தேவ தூதனானவர் விலகி, அவர்களுக்குப் பின்னாக நடந்தார்; அவர்களுக்குமுன் இருந்த மேகஸ்தம்பமும் விலகி, அவர்கள் பின்னே நின்றது'(யாத்.14:19)***

கர்த்தர் இஸ்ரவேல் ஜனங்களை எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணினார்(யாத்.12:51).மேகஸ்தம்பத்திலும்...அக்கினிஸ்தம்பத்திலும் அவர்களுக்கு முன் சென்றார் (யாத்.13:21). ஆனால் வெகு சீக்கிரத்திலே, பார்வோனும், அவனுடைய முழுசேனையும் பின் தொடர்ந்து வருவதைக் கண்டார்கள். அந்த ராத்திரியிலே, பார்வோனின் சேனை அவர்களை பின்னிருந்து தாக்கி மிகுந்த சேதத்தை ஏற்படுத்தியிருக்கக் கூடும்.

அந்த இக்கட்டான சூழ்நிலையிலே தங்களுக்கு முன் சென்ற மேக ஸ்தம்பமும் காணாமற் போயிற்று. அவர்களை விட்டு விலகியது போல தெரிந்தது. ஆனால் வெகு சீக்கிரத்திலே, அந்த மேகஸ்தம்பத்தை பின்னாலே கண்டார்கள். அது எகிப்தியரின் சேனையும் இஸ்ரவேலரின் சேனையும் இராமுழுவதும் ஒன்றோடொன்று சேராதபடி அவைகள் நடுவில் வந்தது (யாத்.14:20).

அடுத்த அற்புதம், நடுவிலே மேகஸ்தம்பம். இஸ்ரவேலர் மாத்திரமல்ல, எகிப்தியரும் அந்த மேகஸ்தம்பத்தைக் கண்டார்கள். ஒரே மேகஸ்தம்பம், எகிப்தியருக்கு அந்தகாரமாயிருந்தது, இஸ்ரவேலருக்கோ வெளிச்சமாய் இருந்தது. அது எப்படி சாத்தியமாயிற்று? கர்த்தர் நம் பின்னாலே நம்மைக் காப்பது நாம் விவரிக்கமுடியாத, விளங்காத ஆனால் உண்மையான அனுபவமாய் இருக்கிறது.

## யோர்தான்

**'பெட்டியைச் சுமக்கிற ஆசாரியர் யோர்தானின் நடுவே நின்றார்கள்; ஜனங்கள் தீவிரித்துக் கடந்துபோனார்கள்' (யோசுவா 4:10)**

நாற்பது வருடங்களுக்குப் பிறகு யோர்தானிலும் இதே அனுபவத்தைக் காண்கிறோம். மேகஸ்தம்பம் அங்கே இல்லை. ஆனால் கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டி அவர்களுக்கு முன் சென்றது. அது தேவ பிரசன்னத்தைக் குறிக்கிறது.

யோர்தான் அறுப்புக்காலம் முழுவதும் கரைபுரண்டுபோம். பெட்டியைச் சுமக்கிற ஆசாரியர்களின் கால்கள் தண்ணீரின் ஓரத்தில் பட்டவுடனே, ... தண்ணீர் நின்று ... ஒரு குவியலாகக் குவிந்தது(யோசு.3:15,16).

இங்கே நாம் கவனிக்க வேண்டிய ஒன்று. கர்த்தருடைய பெட்டி முதலில் முன் சென்றது. ஆனால் எல்லாரும் கரையைக் கடந்த பின்னர் கடைசியாக அடுத்த கரையை வந்து அடைந்தது. எல்லாரும் அடுத்த கரையை அடையுமட்டும் யோர்தானின் நடுவிலே இருந்தது.

முன் சென்ற கர்த்தருடைய பெட்டி, இறுதியிலே பின்னே சென்றது ஏன்? எல்லாரும் அடுத்த கரையை அடைய வேண்டும் என்பதில் தேவன் குறியாக இருந்தார். கரையைக் கடக்குமட்டும் காத்திருந்தார்.

பெட்டியைச் சுமக்கிற ஆசாரியர்கள் யோர்தானின் நடுவில் தண்ணீரில்லாத தரையில் காலூன்றி நிற்கும்போது, இஸ்ரவேலர் எல்லாரும் தண்ணீரற்ற உலர்ந்த தரைவழியாய்க் கடந்துபோனார்கள் (யோசு.3:17).

நமக்கு முன் செல்கிற கர்த்தர், நமக்கு பின்னின்று நாம் கடக்கும்படியாக காத்திருக்கிறார். நமக்கு நியமித்த ஓட்டத்தை நாம் முடிப்பதற்கு பின்னேயிருந்து கர்த்தருடைய உந்துதல் தேவையாக இருக்கிறது.

## கலிலேயாக் கடல்

**'உடனே படகு அவர்கள் போகிற கரையைப் பிடித்தது' (யோவா.6:21)**

தம் சீஷர்கள் படகில் ஏறி, தமக்கு முன்னே அடுத்த கரைக்குப் போகும்படி அவர்களைத் துரிதப்படுத்தினார்(மத்.14:22). இயேசுவினுடைய வார்த்தையின்படியே சீஷர்கள் தங்களுடைய பிரயாணத்தை துவக்கினார்கள். எங்கே செல்ல வேண்டும் என்பதற்கான பதில், அடுத்த கரை என்றும் தெளிவாக சொல்லப்பட்டது.

படகிலே பிரயாணத்தை நன்றாக ஆரம்பித்தார்கள். ஆனால் நடுக்கடலில் வந்தபோதோ, பெருங்காற்று அடித்தது, கடல் கொந்தளித்தது. அவர்கள் கஷ்டப்பட்டு துடுப்பு போட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்கள் அடையவேண்டிய அடுத்த கரையை அடையமுடியாத அபாயம் உருவானது.

ஜெபம்பண்ணுவதற்காக இயேசு ஒரு மலையின்மேல் ஏறினார். இயேசு மலையின் மேலே தனியாக இருந்தார். சீஷர்களோ நடுக்கடலிலே இருக்கிறார்கள். இயேசு அவர்களிடத்தில் வருவதற்கான எந்த சாத்தியமும் இல்லை. சீஷர்களும் கொஞ்சமேனும் அதை எதிர்பார்க்கவில்லை.



மலையின் மேலிருந்த இயேசு இப்போது கடலின்மேல் நடந்து, அவர்கள் சமீபத்திலே வந்தார்.

இயேசுவை தேவாலயத்து உச்சியின்மேல் நிறுத்தி, கீழே குதியும் என்றபோது இயேசு மறுத்து விட்டார். ஆனால், ஆபத்திலே தடுமாறிக் கொண்டிருந்த சீஷர்களண்டையில் வருவதற்கு எந்த அற்புதத்தையும் செய்ய தயங்கவில்லை. அதனை கொஞ்சமும் எதிர்பாராத சீஷர்கள், அவர் கடலின்மேல் நடக்கிறதை பார்த்து, அவரை பிசாசு என்று நினைத்து, சத்தமிட்டு அலறினார்கள் (மாற்.6:49).

**திடன்கொள்ளுங்கள், நான்தான், பயப்படாமல் இருங்கள் (மாற்.6:50).**

நாம் தொடங்கிய நல்ல காரியங்கள் தடைபட்டு, திடீரென வீசிய புயலில் அல்லல்பட்டு, நம்பிக்கையிழந்து பரிதபிக்கிற சூழலிலே, நாம் கொஞ்சமும் எதிர்பார்த்திராத வேளையிலே, 'நான்தான்' என்ற இயேசுவின் இனிய குரல் பின்னேயிருந்து நம்மைத் தேடிவருகிறது. நற்கிரியைகளை நம்மிடத்திலே ஆரம்பித்து விட்டு இடையிலே விட்டுவிடுகிறவர் அல்ல, நம் இயேசு. முற்றும் முடிய நம்மை நடத்துகிறவர் அவர். அந்த இயேசுவின் இன்ப சத்தத்தை அடையாளம் கண்டு கொள்வோமா?

**அப்பொழுது அவரைப் படகில் ஏற்றிக்கொள்ள விருப்பமானார்கள்; உடனே படகு அவர்கள் போகிற கரையைப் பிடித்தது(யோவா.6:21)**

இயேசு அவர்கள் சமீபத்தில் வந்தார். ஆனால் அவர்களைக் கடந்து போகிறவர்போல் காணப்பட்டார் (மாற்.6:48). இயேசு ஒருபோதும் கட்டாயப்படுத்தி எதையும் நம்மிடத்திலே திணிக்கிறவர் அல்ல. நாம் மனமுவந்து, மனப்பூர்வமாக முழுமனதோடு உற்சாகமாக செய்ய வேண்டிய ஒன்று உண்டு என்பதை இங்கே உங்களுக்கு நினைப்பூட்ட விரும்புகிறேன்.

இயேசுவை உன் படகிலே, உன் வாழ்க்கையிலே, உன் இருதயத்திலே முழுமையாக ஏற்றுக்கொள்ள உனக்கு விருப்பம் உண்டா? இயேசுவுக்கு உன் இருதயத்திலே இடம் உண்டா?

என்ன ஆச்சரியம்! இயேசு அவர்கள் இருந்த படகில் ஏறினார். அப்பொழுது காற்று அமைதியானது(மாற்.6:51). இயேசுவை நம் வாழ்க்கையில் அனுமதிக்கிற அந்த தருணம் (moment) மிக மிக விசேஷமானது. புனிதமானது. சீஷர்களை மிகவும் பிரமித்து ஆச்சரியப்பட வைத்தது(மாற்.6:51).

உடனே படகு கரையைப் பிடித்தது. இயேசு சொன்னபடியே அடுத்த கரையை அடைந்தார்கள். நல்ல முடிவு, வெற்றிகரமான முடிவு. நம் பின்னாலே நம்மைக் காக்கிறவர் நம்மை முடிக்கப் பண்ணுவார். நம் ஓட்டத்தை முடித்து, ஜெயத்தோடே பரலோக ராஜ்யத்திலே நம்மை கொண்டு போய் சேர்ப்பார். அல்லேலூயா!

## எனக்கு இயேசுவால்!

## உங்களுக்கும் இயேசுவால்!!

# எனக்கு நன்மை செய்த இயேசு உங்கள் ஒவ்வொருவருக்கும் நன்மை செய்வார்!

எனக்கு அக்டோபர் 2-ம் தேதியிலிருந்து தொண்டை வலி அதிகமாய் இருந்தது. பிறகு அது இருமலாக மாறி மிகவும் கஷ்டப்படுத்தியது. மாத்திரை சாப்பிட்டும், இருமல் மருந்து குடித்தும் குறையவில்லை. துதி ஊழியத்துடன் தொலைபேசியில் தொடர்பு கொண்டு ஜெபித்துக் கொண்டேன். அதன் பின் படிப்படியாக குறைந்து நன்றாகி விட்டது. இப்பொழுது கர்த்தரின் பெரிதான கிருபையால் சுகமாக இருக்கிறேன். சுகம் தந்த இயேசுவுக்கு கோடா கோடி ஸ்தோத்திரம். ஜெபித்த ஜெபவீரருக்கும் நன்றி.

**சகோதரி ராணி ஐசக், சென்னை.**

பாரத்தோடும், கஷ்டத்தோடும், பிள்ளைகளையும், குடும்பத்தையும் குறித்த மன வேதனையோடும் நான் துதி ஊழியத்திற்கு ஜெபிக்க வந்தேன். நான் செய்துவந்த ஊழியத்தில் உபத்திரவங்கள் இருந்தது. ஜெப நேரத்தில் இயேசுவின் வியர்வை இரத்த துளிகளாய் மாறினது என்றால், அவர் எனக்காக எவ்வளவு பாடுபட்டார் என்று உணர்த்தப்பட்டேன். அது எனக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. ஊழியம் செய்வது எவ்வளவு பெரிய சிலாக்கியம் என்பதை இயேசு எனக்கு புரிய வைத்தார். குடும்பத்தை குறித்த பாரமும் மாறி போய்விட்டது. இலகுவான இருதயத்தை கர்த்தர் எனக்குக் கொடுத்தார். கர்த்தருக்கே கோடான கோடி ஸ்தோத்திரம்.

**மதுரையிலிருந்து ஒரு சகோதரி.**

எனக்கு 3 மகன்கள். 2 பேருக்கு திருமணமாகி நன்றாக இருக்கிறார்கள். 3-வது மகன் M.Com. படித்து வேலையில் நிரந்தரமில்லாதபடி சில நாள் வேலையில் இருப்பான், பின்னர் வெளியேறி வந்துவிடுவான். அவன் நிமித்தம் நான் மிகுந்த கண்ணீரோடும் மனச்சுமையோடும் இருந்தேன். அப்போது துதிமலரில் உள்ள சாட்சிகள் என்னைத் தேற்றியது. 'கர்த்தாவே என் பிள்ளையை வாழ வைத்தருளும். நானும் இதுபோல் தேவ நாமத்தை மகிமைப்படுத்துவேன்' என விசுவாசத்தோடு ஜெபித்தேன். கர்த்தர் எனக்கு செவி கொடுத்தார். மகனுக்கு ஒரு கார் கம்பெனியில் வேலை தந்து, திருமணமும் கைகூடிவரப்பண்ணினார். கூடவே பேரக்குழந்தையும் தந்து இரண்டத்தனையாய் ஆசீர்வதித்து என்னை ஆச்சரியப்படுத்தினார்.

**சகோதரி சாராள், திருமங்கலம்.**



## இங்கும் இயேசுவால்!

## எங்கும் இயேசுவால்!

இருக்கிற இடத்தில் எனக்கு அற்புதம்செய்தஇயேசு, நீங்கள் எங்கு இருக்கிறீர்களோ அங்கும் செய்ய வல்லவர்!

கர்ப்பத்தின் கனிக்காக 9 வருடங்கள் காத்திருந்தோம். பல மருத்துவ பரிசோதனைகளையும் சிகிச்சைகளையும் மேற்கொண்டோம். நீங்கள் அனுப்பியிருந்த 'கர்ப்பவதியாக துதி' என்ற ஜெபத்தில் எழுதியிருந்த வசனங்களை தொடர்ந்து அறிக்கை செய்தேன். தேவன் தம்முடைய பெரிதான கிருபையினால் ஒரு ஆண் மகனைத் தந்தார். கர்த்தருடைய நாமம் மகிமைப்படுவதாக.

**இமெயில்மூலமாக சகோதரி சுமித்தா.**

தங்களிடம் என்னுடைய குழந்தை பாக்கியத்திற்காக ஜெபிக்கும்படி இமெயில்மூலம் தொடர்பு கொண்டேன். நீங்களும் ஜெபித்து பதில் அனுப்பி இருந்தீர்கள். கர்த்தர் நம்முடைய ஜெபத்திற்கு பதிலளித்து கடந்த 2020 அக்டோபர் மாதம் ஆண் குழந்தையை கொடுத்து மகிழ செய்தார். ஜெபித்த உங்களுக்கு நன்றி.

**இமெயில்மூலமாக சகோதரி கண்மணி ஸ்டாலின்.**

என் மகளுக்கு திருமணமாகி 2½ வருடம் குழந்தை இல்லாமல் இருந்தது. 'சந்தோஷமான பிள்ளைத் தாய்ச்சியாக துதி' ஜெபத்தை சொல்லி மகள் ஜெபித்தாள். அடுத்த ஆண்டு முடிவிற்குள் அழகான பெண் குழந்தையை தேவன் தந்தார். ஒவ்வொரு மாதமும் துதி மலர் பிள்ளைகள் விசுவாசத்தில் வளர உறுதுணையாக இருக்கிறது. எல்லா துதியும் கனமும் மகிமையும் இயேசுவுக்கே செலுத்துகிறோம்.

**சகோதரி சாந்தி, சிவகாசி.**

அக்சென்ஸர் கம்பெனியில் வேலைக்கான தேர்வை 3 முறை தான் எழுத முடியும். நான் அதில் முதல் 2 முறை எழுதி தோல்வி அடைந்து விட்டேன். இது மூன்றாம் முறை. எனவே பயத்தோடும் ஜெபத்தோடும் எழுதினேன். 10.12.2020 அன்று அக்சென்ஸர் கம்பெனியில் நடந்த தேர்வில் தேவன் கிருபையாய் வெற்றிபெற செய்து, அந்த கம்பெனியில் வேலை கிடைக்கவும் உதவி செய்தார்.

**இமெயில்மூலமாக சகோதரி ரோஸ்னி, திண்டுக்கல்.**

**ஒரு வாரத்தின் 168 மணி நேரங்களில் ஒரு 1/2 மணி நேரம்மட்டும் எங்களுக்காக ஜெபிக்க முன்வருவீர்கள் என்றால், தயவுசெய்து உடனே தொடர்பு கொள்ளுங்கள்.**

## இப்பொழுது இயேசுவால்!

## எப்பொழுதும் இயேசுவால்!

**எனக்கு இப்பொழுது உத்தரவு கொடுத்த இயேசு, கூப்பிடுகிற உங்களுக்கு எப்பொழுதும் கொடுப்பார்!**

என் கணவர் சவுதியில் இருக்கிறார். கடந்த செப்டம்பர் மாதம் தொடர் இருமலினால் மிகவும் கஷ்டப்பட்டார். என்ன செய்வது என்றே தெரியவில்லை. உடனே தொலைபேசியின் மூலமாக தங்களை தொடர்பு கொண்டு ஜெபிக்கும்படி கேட்டுக்கொண்டேன். இயேசப்பா ஜெபத்தைக் கேட்டு அற்புத சுகத்தை தந்தார். இயேசப்பா கிருபையால் இருமல் சரியாகி வேலைக்குச் செல்லுகிறார். ஜெபித்த உங்களுக்கு நன்றி. சுகம் தந்த இயேசப்பாவுக்கு கோடி ஸ்தோத்திரம்.

**சகோதரி ஆன்லிமோகன், கன்னியாகுமரி.**

கடந்த அக்டோபர் மாதத்தில் 8½ வயதான என் அண்ணன் மகளின் மகனுக்கு திடீரென்று காய்ச்சல் வந்து, ரொம்ப மோசமான நிலையில் திருவனந்தபுரம் மருத்துவமனையில் சேர்த்தார்கள். அங்கு பையனை பரிசோதித்த மருத்துவர்கள், இப்போது எங்களால் ஒன்றும் செய்ய முடியாது என்று 48 மணி நேரம் குறித்துவிட்டார்கள். இதற்கு இடையில் இரண்டு நாள் விடியற்காலம் 2 மணி, 3 மணி வேளையில் அவன் அதிக ஆபத்தான நிலையில் இருந்தான். அப்பொழுது அழுகையோடு துதி ஊழியத்திற்கு போன்பண்ணி ஜெபிக்கச் சொன்னேன். நீங்களும் ஜெபித்தீர்கள். கர்த்தர் பூரண விடுதலை தந்தார். ஜெபித்த உங்களுக்கும், சுகம் தந்த தேவாதி தேவனுக்கும் கோடான கோடி நன்றி!

**சகோதரி வசந்தா, கன்னியாகுமரி.**

**'சந்தோஷமான பிள்ளைத்தாய்ச்சி'** ஆக உங்களை தேவன் ஆசீர்வதிக்க உங்களுக்காக எழுதியிருக்கிற துதி குறிப்புகள் 2014-ம் வருடம் மே மற்றும் ஜூன் மாத துதி மலரில் இடம்பெற்றிருக்கிறது. ஒவ்வொரு நாளும் விசுவாசத்தோடு சொல்லி துதிக்க அந்த குறிப்புகள் தேவைப்பட்டால், வாட்ஸ்ஆப்மூலம் பெற்றுக் கொள்ளுங்கள். ஆசீர்வாத குழந்தையை ஏந்தும்படி சம்பந்தப்பட்டவர்களின் பெயர்களை எங்களுக்கு முகவரியுடன் தெரியப்படுத்தினால், நாங்களும் அவர்களுக்காக துதிப்போம்!!

Thuthi Malar, Vol:22, Issue:4, February, 2021, Monthly, Individual copy: Rs.5, Annual subscription: Rs.50, Place of Publication: Madurai.

Published by Tmt.Sunitha Sukumar, Printed by M.Rajkumar on behalf of Tmt.Sunitha Sukumar. Printed at M/S.Bhavani Fine Arts, 37/2, New No:102, Velayutham Road, Sivakasi, Virudhunagar District, TamilNadu-626123. Published from 9,Prasad Road, Narimedu, Madurai - 625002 (T.N). Editor: Tmt.Sunitha Sukumar



## தேவன் யார்? நாம் யார்?



கர்த்தரே தேவனென்று அறியுங்கள்; நாம் அல்ல, அவரே நம்மை உண்டாக்கினார்; நாம் அவர் ஜனங்களு..மாயிருக்கிறோம் (சங்.100:3) நம்மை உண்டாக்கினவர் **தேவன்** - உண்டாக்கினவருக்கு உரிய ஜனம் **நாம்**

பாவங்களை நிவிர்த்திசெய்கிற கிருபாதார பலி அவரே; நம்..பாவங்களை மாத்திரம் அல்ல, சர்வலோகத்தின் பாவங்களையும் நிவிர்த்திசெய்கிற பலியாயிருக்கிறார் (Iயோவா.2:2) நம் பாவங்களுக்காக பலியான **தேவன்** - பரிசுத்தமாயிருக்க நியமிக்கப்பட்டவர்கள் **நாம்**

உங்கள் தேவனாகிய கர்த்தர் .. பட்சபாதம்பண்ணுகிறவரும் அல்ல, பரிதானம் வாங்குகிறவரும் அல்ல (உபா.10:17) பாரபட்சமாய் பார்க்காத **தேவன்** - சகமனிதரை அவரைப்போல பார்க்க வேண்டியவர்கள் **நாம்**

நீர் துன்மார்க்கத்தில் பிரியப்படுகிற தேவன் அல்ல(சங்.5:4) துன்மார்க்கத்தை விரும்பாத **தேவன்**-துன்மார்க்க செயலை வெறுக்க கடமைப்பட்டவர்கள் **நாம்**

பொய் சொல்ல தேவன் ஒரு மனிதன் அல்ல; மனம்மாற..மனுபுத்திரனும் அல்ல; அவர் சொல்லியும் செய்யாதிருப்பாரா? .. வசனித்தும் நிறைவேற்றாதிருப்பாரா? (எண்.23:19) சொன்னதை செய்யும் **தேவன்**-சொன்னதை மறக்காத, மாற்றாத, மறுக்காத அவரின் வாக்கை நம்பவேண்டியவர்கள் **நாம்**!

கர்த்தர் பட்டயத்தினாலும் ஈட்டியினாலும் ரட்சிக்கிறவர் அல்ல (Iசாமு.17:47) எது இருந்தாலும் இல்லாவிட்டாலும் ரட்சிக்கிற **தேவன்** - சாதகமாக இருப்பவைகளை அல்ல, அவரையே சார்ந்திருக்க வேண்டியவர்கள் **நாம்**!

பலத்தினாலும் அல்ல, பராக்கிரமத்தினாலும் அல்ல, என்..ஆவியினாலேயே ஆகும்(சக.4:6) தம் ஆவியினாலேயே எதையும் நடப்பிக்க வல்லவர் - பலமும், பராக்கிரமமும் பலனளிக்காது என அறிய வேண்டியவர்கள் **நாம்**!

விரும்புகிறவனாலும் அல்ல, ஓடுகிறவனாலும் அல்ல, இரங்குகிற தேவனாலேயாம் (ரோம.9:16) இரங்குகிறவர் **தேவன்** - நம் விருப்பத்தினாலோ, பிரயாசத்தினாலோ சாதிக்கமுடியாது என புரிந்திருக்கவேண்டியவர்கள் **நாம்**!

என் நினைவுகள் உங்கள் நினைவுகள் அல்ல; உங்கள் வழிகள் என் வழிகளும் அல்லவென்று கர்த்தர் சொல்லுகிறார். பூமியைப் பார்க்கிலும் வானங்கள் எப்படி உயர்ந்திருக்கிறதோ, அப்படியே உங்கள் வழிகளைப் பார்க்கிலும் என் வழிகளும், உங்கள் நினைவுகளைப் பார்க்கிலும் என் நினைவுகளும் உயர்ந்திருக்கிறது (ஏசா.55:8,9) உயர்ந்த நினைவுகளையும், வழிகளையும் உடையவர் **தேவன்** - நம்மைக்குறித்த நம் நினைவும், வழியும் சாதாரணம் என்பதை உணர்ந்திருக்க வேண்டியவர்கள் **நாம்**!

Date of Publication: 28-01-2021
Registered: TN/MA/88/2021-2023
Licenced to Post Without Prepayment Under
Licence No. Registered: TN/WPP-06/SR/2021-2023
Posted at RMS Madurai - 625 001.
Posted on 28th & 29th January 2021
Registered News Paper: RNI No. 72169/99
Registrar Of News Papers, NewDelhi.



**தலைப்பு செய்திகள்**

அத்தியாவசியமான அழியா ஆஸ்தி!
கிடைக்குமிடம் தெரியாதவருக்கு குழப்பம்!
தொடர் தேடலில் பலருக்கும் ஏமாற்றம்!
விடையை அறிந்துகொள்ள
...விரிவான விளக்கம் தொடருகிறது!!

மனிதன் நாடுகிற உடல் ஆரோக்கியம், உணவு, உறக்கம், உற்சாகம், உவகை ... இதன் பின்னணியில் ஒவ்வொருவருக்கும் **நிம்மதி என்ற அழியா சொத்து** தேவைப்படுகிறது!

பணம் சம்பாதித்தும், புகழேணியின் உச்சத்தை எட்டியும், உயர்பதவியில் அமர்ந்தும், விரும்பி காத்திருந்தது கிடைத்தும் நிம்மதி கிடைக்காததே பலரின் குழப்பத்திற்குக் காரணம்!

நண்பர்களோடும், குடும்பத்தினரோடும், அன்புக்குரியவர்களோடும் கடற்கரை, உணவகம், பூங்கா, இயற்கை எழில் பொங்கும் இடங்கள், கேளிக்கை விடுதி .... இப்படி எங்கெங்கோ சென்று நிம்மதிக்காய் அலைந்து திரிந்தும் மிஞ்சியது ஏமாற்றமே!

**நீங்கள் தேடுகிற நிறைவான நிம்மதி இயேசு ஒருவரிடமே உண்டு! உங்களிடத்தில் இருப்பதை அல்ல, உங்களையே இயேசுவிடம் கொடுக்கும்போது நிம்மதி உள்ளத்தை நிறைக்கும்!**

தேவன் செய்வது எதுவோ அது என்றைக்கும் நிலைக்கும்(பிர.3:14). இயேசு தருகிற நிம்மதியை எதுவும் கலைக்கவோ, குறைக்கவோ முடியாது என்பதை உங்கள் உள்ளத்தில் கல் வெட்டாய் செதுக்கிக் கொள்ளுங்கள்!!

If undelivered please return to
SIS. SUNITHA SUKUMAR
9, Prasad Road
Narimedu, MADURAI - 625 002.
Phone - 0452 2531627, 2533627
Cell - 98430 31627

MRS.SUGIRTHAM JOHN
F4 SUBIKSHA FLAT
VYASAR STREET
TAMBARAM EAST
CHENNAI 600059